# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 13 | 1953 அக்டோபர் 25 | விஜய ஐப்பசி 9

| | | | |
|---|---|---|---|
| அருள் பெற்ற மணி மண்டபம் | (தலையங்கம்) | ... | 3 |
| காந்தி மண்டபம் மங்களத் துவக்க விழா | போட்டோ : எம். டி. கணேஷ் | ... | 4 |
| குற்றால முனிவர் வாழ்க! | ... | ... | 6 |
| யாவரும் வரவேற்கும் வரி | ... | ... | 7 |
| பொன்னியின் செல்வன் | கல்கி | ... | 10 |
| உதவிக்கு வந்தவன் பாடு! | ... | ... | 16 |
| கோமளத்தின் காதலன் | வ. சா. நாகராஜன் | ... | 19 |
| மனோரமா | ரமண்லால் வஸந்தலால் தேசாய் - ரா.வீ. | ... | 27 |
| முத்து வளை | பிருந்தா | ... | 33 |
| தமிழ்க் களஞ்சியம் (அட்டைப் படம்) | டி. கே. சி. | ... | 38 |
| மச்ச கன்னிகை | துஷ்யந்தன் | ... | 41 |
| பரிசோதனை! | சாமா | ... | 44 |
| இளவரசி பிரபா (பாப்பா மலர்) | சீதா | ... | 47 |
| சகோதரி மீனு | கி. ரங்கராஜன் | ... | 51 |
| சோஷலிஸம் ஏன் வேண்டும்? | எஸ். ராமசுப்பிரமணியம் | ... | 59 |
| கல்யாணியின் கடமை | என். எஸ். வெங்கட்ராமன் | ... | 64 |
| போர் சிருஷ்டித்த புதுமை (இரும்புத் திரை) | ஜெயமணி | ... | 71 |



## யாருக்குச் சிரமம்?




மில் துணிகள் அபரிமிதமாகத் தேங்கிக் கிடப்பதால் ஆலைத் தொழில் சிரமதசையை யடைந்திருக்கிறதென்றும், அதற்கு அரசாங்கம் உடனே உதவி செய்ய முன் வர வேண்டும் என்றும் ஆலை முதலாளிகள் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள்.



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 13

# அருள் பெற்ற மணி மண்டபம்!

இந்த ஆண்டில் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதி வழக்கம்போல் புது டில்லி ராஜ கட்டத்திலே காந்தி ஜெயந்தி வைபவத்தை ஒட்டிப் பஜனையும் பிரார்த்தனையும் நிகழ்ந்தன. பாரத நாட்டின் தலைநகரான அப் பிரதேசத்தில் பிரம்மாண்டமான ஞாபகச் சின்னத்தை நிர்மாணிப்பதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

பம்பாயிலும் கல்கத்தாவிலும் ஏற்கெனவேயே நிர்மாணமாகியுள்ள ஞாபகச் சின்ன மண்டபங்களில் இவ் வருஷம் காந்தி ஜெயந்திக் கொண்டாட்டம் வெகு விமரிசையாக நடைபெற்றது.

மற்றும் இந்தியாவில் உள்ள பல பெரிய பட்டணங்களிலும் சிறிய கிராமங்களிலும் காந்தி மகானின் ஜெயந்தியை முன்னிட்டு மகாஜனங்கள் கூடித் தேச பிதாவுக்கு அஞ்சலி செய்தார்கள்.

காந்திஜியின் ஞாபகச் சின்னம் அமைக்கப்பட்டுள்ள இடங்களில் ஜனங்கள் பெருமையுடன் கூடிப் பிரார்த்தனை செய்தனர்.

ஞாபகச் சின்னம் இராத இடங்களில் பொதுமக்கள் மாபெரும் தலைவருக்குப் பிரசங்க மாலை சூடி மகிழ்ந்தனர்.

கோடானு கோடி மக்கள் தங்களுடைய ஹிருதய மாளிகையில் நிரந்தரமாக வசிக்கும் உலக உத்தமரைப் போற்றிப் புளகாங்கிதம் அடைந்தனர்.

இதுபோல் வெளி நாடுகளிலும், நியூயார்க், லண்டன் போன்ற மாபெரும் பட்டணங்களிலும், காந்தி ஜெயந்தி வைபவம் அமோகமாகக் கொண்டாடப்பட்டது.

சிங்கப்பூரில் நிர்மாணிக்கப்பட்டுள்ள, கிழக்காசியாவிலேயே மிகப் பெரியதான காந்தி ஞாபகச் சின்னத்தின் கீழ் ஆயிரக்கணக்கான இந்திய சகோதர சகோதரிகள் கூடி, காந்திஜியின் அடிச்சுவடுகளைத் தொடர்ந்து பின்பற்ற உறுதி கொண்டனர்.

நியூயார்க், லண்டன் போன்ற நகரங்களில் கூட காந்தி ஞாபகச் சின்னம் நிர்மாணிப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகையில், இந்தியாவில் உள்ள முக்கிய பட்டணங்களில் காந்தி மகானின் ஞாபகச் சின்னம் கம்பீரமாகக் காட்சி அளிக்கவேண்டியது அவசியம் அல்லவா?

கத்தியின்றி இரத்தமின்றி உருவான சுதந்திர இந்தியாவே மகாத்மா காந்தியின் ஞாபகச் சின்னம்தான்!

இந்த உலகில் சுதந்திர இந்தியா உள்ளளவும், சந்திர சூரியர் உள்ளளவும் காந்தி மகானை யாரும் மறக்க முடியாது என்பது உண்மையே.

இருந்தாலும் ஒவ்வொரு ஊரிலும் அந்த அவதார புருஷரின் ஞாபகார்த்தமாக ஒரு புனிதப் பிரார்த்தனை ஸ்தலம் இருக்க வேண்டியது அத்தியாவசியம்.

சென்னை மாநகர் சம்பந்தப்பட்ட வரையில் இந்தக் குறை தீருவதற்கு இப்போது வழி பிறந்திருக்கிறது. சில தினங்களுக்கு முன் ராஜாஜியின் தலைமையில் கூடிய காந்தி ஞாபகார்த்தக் கமிட்டியார் இந்தியாவின் தந்தைக்கு நினைவுச் சின்னம் அமைக்கும் விஷயமாக வகுத்த திட்டம் உருவாகத் தொடங்கியிருக்கிறது.

இதற்கு இணங்க, சென்ற 17-ந் தேதி சனிக்கிழமை சுபயோக சுப தினத்தில் வெற்றித் திருநாளான விஜயதசமி அன்று சென்னைக் கவர்னர் கனம் ஸ்ரீ பிரகாசா காந்தி நினைவுச் சின்ன கோபுரத்துக்கும் பிரார்த்தனை மண்டபத்துக்கும் அஸ்திவாரக்கல் நாட்டினார்.

பெரு மழையையும் பொருட்படுத்தாமல் அவ் வைபவத்துக்குப் பெண்மணிகள் உள்படத் திரளான ஜனங்கள் வந்திருந்தார்கள். சென்னை மந்திரிகள், ஹைகோர்ட் நீதிபதிகள், சட்ட சபை அங்கத்தினர்கள் முதலிய ஏராளமான பிரமுகர்கள் விஜயம் செய்து, காந்தி மண்டபத்தின் மங்களத் துவக்க விழாவைச் சிறப்பித்தார்கள்.

கிண்டியில் உள்ள ராஜபவன் தோட்டத்தில், டாக்டர் அளகப்பச் செட்டியார் டெக்னாலஜி கலாசாலைக்கு எதிரில் மேற்படி ஞாபகார்த்தப் பிரார்த்தனை மண்டபம்

1. காந்தி மண்டபம் மங்களத் துவக்க விழாவுக்குக் கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசா விஜயமாகிறார். காந்தி மண்டபக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை அவரை வரவேற்று அழைத்துச் செல்கிறார்.

2. "மங்களத் துவக்க விழாவுக்கு மழையும் விஜயம் செய்திருக்கிறது!" என்கிறார் ராஜாஜி. காந்தி மண்டபக் கமிட்டியின் உபதலைவர் கனம் பக்தவத்ஸலம் புன்னகை புரிகிறார்.

3. விழா மேடையில் ஒரு தோற்றம். தலைப்பாகையுடன் அமர்ந்திருப்பவர்தான் கட்டிட நிபுணர் (ஆர்க்கிடெக்ட்) ஸ்ரீ டி. எம். தெய்வசிகாமணி ஆச்சாரியார் எம். எல். ஸி. அவர்கள்.

4. காந்தி மண்டபக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளை அவர்களும், மங்களத் துவக்கம் செய்த கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்களும், அஸ்திவாரக் கல் மேலே இருந்து இறங்குகிறது.

5. "இந்தக் காந்தி மண்டபத் திருப்பணிக்குப் பிரதம மேஸ்திரி நம் கவர்னர் அவர்கள்தான்" என்று கூறுகிறார் ராஜாஜி.

6. காந்தி மண்டப மங்களத் துவக்க விழாவுக்கு விஜயம் செய்திருந்த மகா சபையில் ஒரு பகுதி. முன்னணியில் வீற்றிருக்கும் மேயர் செங்கல்வராயன் கடைசியில் வந்தனோபசாரம் கூறும்போது, "இந்தத் திருப்பணிக்கு இன்னும் வேண்டிய பணம் முழுவதையும் சென்னை நகரவாசிகளே கொடுத்து விடுவார்கள்!" என்று உறுதி கூறினார்.

7. கவர்னர் கையில் கரணை பிடித்துக் கொல்லத்து வேலை செய்கிறார்.

8. மங்களத் துவக்க விழாவில் அஸ்திவாரக் கல் உறுதியாக நாட்டப்பெற்ற பிறகு, ராஜாஜி ஒரு கணம் கண்களை மூடிப் பிரார்த்தனையில் இருந்தார்.

9. தாதா கம்பெனி சொந்தக்காரர் ஸ்ரீ லால்சந்த் தாதாவைப் பார்த்து, ராஜாஜி, "நீங்கள் இந்தத் திருப்பணிக்கு ஒரு லட்சம் ரூபாய் சேர்த்துக் கொடுக்க வேண்டும்!" என்றார். ஸ்ரீதாதா "தாங்கள் ஒருநாள் ஒரு மணி நேரம் நாங்கள் இருக்கும் பகுதிக்கு வந்தால் ஒரு லட்சத்துக்கு என்ன பிரமாதம்?" என்றார்.



கம்பீரமாகக் காட்சி அளிக்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்பதைக் கேட்கத் தமிழ் மகாஜனங்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.

* * *

வைபவத்துக்கு விஜயம் செய்திருந்த அனைவரையும் காந்தி ஞாபகார்த்தக் கமிட்டித் தலைவரும் சபாநாயகருமான ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளை வரவேற்றுப் பேசுகையில், ஞாபகச் சின்னத்தின் அவசியத்தை எடுத்துக் கூறினார்.

மகாத்மா காந்திக்கு அவர் உபதேசித்து வந்த அஹிம்சைத் தத்துவமே சிறந்த ஞாபகச் சின்னம்; இந்தியாவின் சுயராஜ்யமே அவருக்கு நினைவுச் சின்னம் என்று கூறலாம். ஆயினும் நாம் கலி யுகத்தில் இருந்து வருகிறோம். இந்த யுகத்துக்கு ஏற்றபடி பிரத்தியட்சமான ஞாபகச் சின்னம் அவசியமாக இருக்கிறது என்று ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை குறிப்பிட்டார்.

"காந்தி மகானின் ஞாபகச் சின்னமாக முதலில் ஒரு ஸ்தூபி நிர்மாணிக்கவே ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. ஆனால், பிறகு ராஜாஜி கூறிய யோசனைக்கு இணங்க காந்தி மகானின் ஞாபகார்த்தமாகப் பிரார்த்தனை மண்டபம் கட்டுவதென்று நிர்மானிக்கப்பட்டது. பிரார்த்தனையின் சக்தியில் மகாத்மா காந்திக்கு இருந்த நம்பிக்கை யாவரும் அறிந்ததே. ஜாதி, சமய, மத பேதமின்றி எல்லோரும் பிரார்த்தனை செய்யலாம். காந்திஜியின் பிரசித்தி பெற்ற பிரார்த்தனைக் கூட்டங்களே தேசத்தில் ஒற்றுமையை நிலை நிறுத்துவதற்கு உதவியாக இருந்தன. பிரார்த்தனைக் கூட்டங்களில் அவர் அருளிய மணி மொழிகளின் மூலமே அஹிம்சைத் தத்துவத்தை உலகம் அறிந்து கொண்டது. எனவே, காந்தி மகானுக்குப் பிரார்த்தனை மண்டபத்தைக் காட்டிலும் சிறந்த ஞாபகச் சின்னம் வேறு இருக்க முடியாது."

இவ்விதம் விவசாய மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்சலம் மேற்படி வைபவத்தில் பேசியபோது அதன் அவசியத்தை விளக்கிக் கூறினார்.

"இரவெல்லாம் இடித்த இடியையும் அடித்த பெரு மழையையும் பார்த்தபோது இன்று காலையில் இந்த விழா நடக்குமா என்று சந்தேகமாக இருந்தது ஆயினும் மனப்பூர்வமாகப் பிரார்த்தித்தால் கடவுளின் அருள் கிடைக்கும் என்பதற்கு, இந்த வைபவம் நடக்கும் சமயத்தில் மழை நின்று வானம் வெளுத்திருப்பதே சான்று" என்று ராஜாஜி ஆசி கூறினார்.

பிறகு மேளவாத்தியம் முழங்க, கவர்னர் ஸ்ரீ பிரகாசா பிரார்த்தனை மண்டபத்துக்கு அஸ்திவாரக் கல்லை அமைத்தார்.

சுதந்திரத்தைக் காட்டிலும் ஐக்கிய பாவமும் ஒற்றுமையுமே பிரதானம். ஒற்றுமையின் மூலமே சுதந்திரம் பெற்றோம். ஐக்கியமும் ஒற்றுமையும் சீர்குலையாமல் இருப்பதற்கு உற்ற வழி பிரார்த்தனைதான். பிரார்த்தனைக்கு இந்த ஆலயம். இந்த மண்டபம் இன்றியமையாதது என்று கவர்னர் உற்சாகத்துடன் குறிப்பிட்டார்.

* * *

சென்னையில் காட்சியளிக்கப் போகும் காந்தி ஞாபகச் சின்னம் தென்னிந்தியாவின் பண்பாட்டையும் சிற்பச் சிறப்பையும் அனுசரித்து நிர்மாணிக்கப்படும். முகப்பில் கோபுரத்துடன் விளங்கப்போகும் பிரார்த்தனை மண்டபத்தில் ஆயிரத்து ஐந்நூறு பேர்களுக்கு இடவசதி இருக்கும். அதை அடுத்து அமையும் அழகிய புல் தரையில் ஆறாயிரம் ஜனங்கள் உட்காரலாம்.

கோபுரமும் பிரார்த்தனை மண்டபமும் கட்டி முடிய மூன்றரை லட்சம் ரூபாய் செலவாகும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இதுவரையில் ஒன்றரை லட்சம் ரூபாய் வசூலாகியிருக்கிறது. இன்னும் இரண்டு லட்சம் வசூலாக வேண்டும்.

மிகவும் உத்தமமான இந்தக் கைங்கர்யத்துக்குக் கொடை வள்ளல்கள் நிறைந்த தமிழ் நாட்டில் இரண்டு லட்சம் என்ன, ஐந்து லட்சம் ரூபாய் கூட வசூலாவதில் கஷ்டம் இராது என்பதே நமது திடமான நம்பிக்கை!

# குற்றால முனிவர் வாழ்க!!

கவிமணி ஸ்ரீ தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் நம் காலத்தில் வாழ்ந்திருக்கும், சிறந்த தமிழ்க் கவிஞர். தமிழ்ப் பண்போடும், தமிழ்ச் சுவையோடும் கூடிய பல அருமையான தமிழ்ப் பாடல்களை அளித்திருக்கிறார். அவற்றில் ஒன்று ரசிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களைப் பற்றிப் பாடிய பின் வரும் பாடல்.

" கன்னித் தமிழே போல்
கம்பன் கவியே போல்
மன்னும் பொதிகை
மலையேபோல் — பன்னுநம்
நாடு மகிழச்
சிதம்பர நாதநண்பா
நீடுநீ வாழ்க நிலைத்து."

கன்னித் தமிழையும், கம்பன் கவிதையும், மன்னும் பொதிகை மலையில் வளர்ந்த தமிழரின் ஒப்பற்ற பண்பாட்டையும் நமது நாளில் காவல் காத்து வருகிறவர் ரசிகமணி டி. கே. சி. அவர்கள்.

தமிழ்நாட்டிலும் சரி, தமிழ் விழா, கம்பர் விழா, வள்ளுவர் விழா எது நடந்தாலும், ரசிகமணி டி. கே. சி. அவர்கள் வராவிட்டால் விழா பூர்த்தியடைந்ததாகக் கருதப்படுவதில்லை.

ஆனால் சென்ற இரண்டு ஆண்டுகளாக ரசிகமணி அவர்கள், வெளியூர்களுக்குப் பிரயாணம் செய்ய அவருடைய உடல் நிலை இடங்கொடுக்காமல் போய் விட்டது. குற்றால முனிவர் குற்றாலத்திலேயே வாழ்ந்திருக்கும்படியான அவசியம் நேர்ந்து விட்டது. நாடெங்குமுள்ள தமிழன்பர்களுக்கு இதனால் ஏற்பட்டுள்ள ஏமாற்றம் சொல்லத்தரமல்ல. கடைசியாக ரசிகமணியின் அன்பர்கள் மலை நம்மிடம் வராவிட்டால் நாம் மலையிடம் போவது என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள். தமிழுக்கு ஒப்பற்ற பணி புரிந்து வரும் ரசிக மணி அவர்களுக்குப் பாராட்டு விழா நடத்தக் குற்றாலத்துக்கே போவதென்று நிர்மானித்திருக்கிறார்கள். அதற்கு ஒரு நல்ல வாய்ப்பும் கிடைத்திருக்கிறது.

குற்றாலத்தில் "பொதிகை மலை பதிப்பகம்" என்ற பெயருடன் தொடங்கியுள்ள புத்தகப் பிரசு

ராலயத்தார் ரஸிக மணி அவர்களின் ஆராய்ச்சி உரைகளுடனும் கவிதைப் பண்பை விளக்கும் குறிப்புக்களுடனும் கூடிய கம்பராமாயணப் பதிப்பை வெளியிட முன்வந்திருக்கிறார்கள். மூன்று புத்தகங்களாக வெளிவரப் போகும் இப் பதிப்பில் பால காண்டமும், அயோத்தியா காண்டமும் அடங்கிய முதல் புத்தகம் தயாராகி விட்டது. இன்னும் இரண்டு புத்தகங்களும் கூடிய சீக்கிரம் வெளியாகும்.

கம்பராமாயணப் பதிப்பைத் தொடர்ந்து ரஸிக மணி அவர்கள் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்திலிருந்து பொறுக்கி எடுத்துச் சேர்த்திருக்கும் கவிதா ரத்தினங்களையும் விளக்க உரைகளுடன் வெளியிடப் போகிறார்கள்.

கம்ப ராமாயண முதல் புத்தகத்தின் அரங்கேற்று விழாவை ரஸிகமணி அவர்கள் செய்து வரும் தமிழ்த்தொண்டிற்குப் பாராட்டு விழாவாகவும் நடத்தத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இந்த விழா குற்றாலத்தில் அக்டோபர் மாதம் 31உ மாலை நமது முதன் மந்திரி ராஜாஜி அவர்கள் தலைமையில் நடைபெறுகிறது. தமிழ் அன்பர்களும் ரஸிகமணி யன்பர்களும் அன்று குற்றாலத்துக்குத் திரளாக விஜயம் செய்து விழாவைச் சிறப்பிப்பார்களென்று நம்புகிறோம்.

# யாவரும் வரவேற்கும் வரி

இந்த அக்டோபர் மாதம் 15–ம் தேதியிலிருந்து இந்தியா முழுவதும் சொத்து வரி அமுலுக்கு வந்து விட்டது.

வரிகளுக்குள்ளேயே மிகவும் நியாயமான வரி, எல்லோராலும் வரவேற்கத் தக்க வரி, எத் தேசத்தினருக்கும் எம் மதத்தினருக்கும் சம்மதமான வரி ஒன்று இருக்குமாயின், அது இந்தச் சொத்து வரிதான் எனலாம்.

இந்த உலகத்திலேயே முதன் முதலாக ஜனங்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரி சொத்து வரிதான் என்று சரித்திர ஆதாரங்களிலிருந்து சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிகிறது.

அமெரிக்காவில் 1798–ம் ஆண்டிலேயே மேற்படி வரி அமுலுக்கு வரத் தொடங்கியது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் மகோன்னத நிலையில் இருந்த ரோமிய சாம்ராஜ்யத்தில் சொத்து வரி வசூலிக்கப்பட்டதாகச் சரித்திரம் கூறுகிறது. இன்று உலகில் முன்னேற்றம் அடைந்துள்ள பெரும்பாலான நாடுகளிலும் சொத்து வரிச் சட்டம் அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது.

ஐரோப்பிய நாடுகள் பெரும்பாலான வற்றிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே சொத்து வரி அமுலுக்கு வந்து விட்டது.

ஆஸ்திரேலியாவில் சொத்து வரி மூலம் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானம்தான் மிகவும் அதிகம் ஆகும்.

எனவே, இந்தியாவிலும் வெகு காலத்துக்கு முன்பே இந்த வரி அமுலுக்கு வந்திருக்க வேண்டும்.

இங்கு சொத்துவரி விதிக்க நூறு ஆண்டுகளுக்கு முன்பே முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன.

அதன்பின் ஏழைகளைப் பாதிக்கக்கூடிய எத்தனையோ வரிகள் அமுலுக்கு வந்து விட்டன. ஆனால் சொத்து வரி மாத்திரம் அமுலுக்கு வர முடியாமல் எண்ணிக்கையற்ற எத்தனையோ முட்டுக் கட்டைகள் ஏற்பட்டு வந்தன.

அதன் பின் பல தடவைகளிலும் சொத்து வரி விதிப்பதன் சம்பந்தமாகக் கைக்கொள்ளப்பட்ட முயற்சிகள் பற்பல காரணங்களால் வெற்றி பெற முடியாமற் போயின.

கடைசியாக, சென்ற வருஷம் ஆகஸ்டு மாதம் பார்லிமெண்டில் கொண்டு வரப்பட்ட சொத்து வரி மசோதா ஒருவழியாக நிறைவேறி, சென்ற பதினைந்தாம் தேதி சட்டப் புத்தகத்திலும் இடம் பெற்று விட்டது மகிழ்ச்சிக்குரிய விஷயம் ஆகும்.

* * *

இரு நூறு வருஷ காலம் அன்னியர் ஆட்சியின் காரணமாகச் சீர்குலைந்த இந்தியாவின் பொருளாதார நிலைமை, சென்ற மகா யுத்தத்தின் விளைவாக இன்னும் மோசமாகி விட்டது.

எனவே, ஆனந்தமாக வாழ்க்கை நடத்த வேண்டிய சுதந்திர இந்திய மக்கள் பொருளாதாரக் கஷ்டங்களால் அல்லல்படும்படி நேர்ந்திருக்கிறது. அன்னியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற பாரத மக்கள் இன்னும் பொருளாதாரத் துன்பத்திலிருந்து விடுதலை பெறவில்லை.

பொருளாதார சுபிட்சம் ஏற்படுவதற்காகவே இந்திய சர்க்கார் கோடானுகோடி ரூபாய் செலவில் பாரத நாடெங்கும் பற்பலத் திட்டங்களைக் கைக் கொண்டிருக்கிறார்கள்.

அந்தத் திட்டங்கள் நிறைவேற வேண்டுமாயின் ஜனங்களின் ஆதரவு வேண்டும்; நிபுணர்களின் உழைப்பு வேண்டும்; செல்வந்தர்களின் கணிசமான உதவி வேண்டும்.

மேற்படி திட்டங்களுக்குப் பொது மக்களின் ஆதரவு பூர்ணமாக இருக்கிறது. நிபுணர்களின் உழைப்புக்கும் குறைவில்லை. செல்வந்தர்களின் உதவியைப் பெறுவதற்குச் சொத்து வரி விதிப்பது மிகவும் நியாயமான ஒரு முறையாகும். அந்த முறையையே கைக்கொள்ள இப்போது சர்க்கார் சட்டம் இயற்றி யிருக்கிறார்கள்.

மிதாட்சர, மருமக்கத்தாயம் சட்டத்துக்குக் கட்டுப்பட்ட ஹிந்து குடும்பத்தினுடைய சொத்தின் பெறுமானம் ஐம்பதினாயிரம் ரூபாய்க்குக் குறைந்திருந்தால், அத்தகையோருக்குச் சொத்து வரி கிடையாது. மற்றவர்களுக்கு லக்ஷ ரூபாய் வரையில் பெறுமானமுள்ள சொத்துக்களுக்கு வரி விலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. அதற்கு மேல் சொத்து உடையவர்களுக்குத்தான் வரி விதிக்கப்பட்டிருக்கிறது.

மிகவும் தர்ம நியாயமான சொத்து வரி, பாக்கியசாலிகளான செல்வந்தர்களுக்குச் சிறந்த சந்தர்ப்பத்தை அளிக்கிறது என்றே சொல்ல வேண்டும்.

சொத்து உள்ளவர்கள் தாங்கள் இறந்த பிறகும் தேச நலனுக்காகத் தங்களுடைய சொத்தின் ஒரு சிறு பகுதியைக் கொடுத்து உதவுகிறார்கள். அந்தச் சொத்துக்களுக்கு வாரிசு உரிமையை ஏற்றுக் கொள்வோருக்கும் மேற்படி நல்ல கைங்கர்யத்தில் பங்கு கிடைக்கின்றது.

தேச மக்களின் க்ஷேமத்துக்காகவும் சுபிட்சத்துக்காகவும் உழைக்கும் சுதந்திர சர்க்காருக்கு, பதுக்காமலும் மறைக்காமலும் மனம் உவந்து சொத்து வரியைச் செலுத்துவதன் மூலம் செல்வம் படைத்தவர்கள் புண்ணியமும், தேசத்துக்கு நன்மையும் செய்தவர் ஆவார்கள்.





சென்னை நகரசபை அதிகாரிகள் கூட்டுறவு பாங்கியின் முப்பதாவது ஆண்டு விழா சென்ற 17ல. சென்னை கவர்னர் தலைமையில் சிறப்பாக நடந்தது. கமிஷனர் ஸ்ரீ சுப்பராயனும், பிரதம அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் ஸ்ரீ சத்தியமூர்த்தியும் விழாவுக்கு வந்தவர்களை வர வேற்றுப் பேசினார்கள். மேயர் செங்கல்வராயன் படத்தை ஸர் ஸி. பி. ராமசாமி ஐயர் திறந்து வைத் தார். மேற்படி விழாக் காட்சிகளையும், அந்த விழா வில் நிகழ்ந்த நகர சபைச் சிப்பந்திகளின் மாறு வேஷக் காட்சிகளையும் படத்தில் காணலாம்.

# தீபாவளி விசேஷ விற்பனை!

**தீபாவளிக்கு வேண்டிய ஜவுளிகள் வாங்கியாச்சோ?**

வழக்கம்போல் இவ்வாண்டிலும் கொள்ளேகாலம் பட்டுச் சேலைகள், தாவணிகள், பாவாடைகள் முதலியனவும் நூல் ரகங்களும் ஏராளமாக உங்களுக்கென்றே வரவழைத்திருக்கிறோம்.

அனைவரும் தங்களுக்குப் பிடித்தமானதை முன்னதாகவே தேர்ந்தெடுத்துக் கொள்ள முந்துங்கள். விலைகள் யாவும் மிக மலிவு. தரத்திற்கும் உத்தரவாதத்திற்கும் நற்பெயர் பெற்ற இடம்.

○●○

## P. B. லக்ஷ்மண ஸா & பிரதர்ஸ்

பட்டு ஜவுளி வியாபாரம்

109, ஐயா முதலித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 2

போன்: 86966

நமது கிளைகள்

**P. B. லக்ஷ்மண ஸா & பிரதர்ஸ்**

பட்டு ஜவுளி வியாபாரம்

No. 1. தேவ்ஜீமேக்ஜீ பில்டிங்
பந்தர்கார் ரோடு,
மாதுங்கா (G. I. P.) பம்பாய் –19

C/o K. R. கிருஷ்ணன்
18, K—ரோடு,
ஜெம்ஷெட்பூர் - 1

---

உயர்தர
ஸிஸர்ஸ் சிகரெட்
தயாரிப்ப வர்களின்

**SCISSORS**

தீபாவளி
வாழ்த்துக்கள்



# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 48

## "நீ என் மகன் அல்ல"

ஆதித்த கரிகாலரின் இறுதி ஊர்வலம் காவிரி நதிக்கரையோரமாகத் தஞ்சையை நோக்கிச் சென்றபோது, அந்த ஊர்வலத்தில் சோழ நாட்டு மக்கள் லட்சக்கணக்கானவர்கள் கலந்து கொண்டார்கள். வீரர்களைப் போற்றும் குணம் அந்நாளில் தமிழகத்தில் பெரிதும் பரவியிருந்தது. இடையில் சில காலம் சோழ குலம் மங்கியிருந்து, விஜயாலய சோழர் காலத்திலிருந்து மீண்டும் தலையெடுத்ததைக் கண்டோம் அல்லவா? நூறு ஆண்டுகளாக அந்தக் குலத்தில் பிறந்தவர்கள் ஒவ்வொருவரும் வீரப் புகழில் ஒருவரையொருவர் மிஞ்சிக் கொண்டு வந்தார்கள். விஜயாலயன் மகன் ஆதித்த வர்மன் பல்லவ குலத்தின் புகழை அழித்துத் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான். அவனுடைய மகன் பராந்தக சக்கரவர்த்தி மதுரையும் ஈழமும் கொண்டு தென்னாடு முழுவதையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தினான். பராந்தக சக்கரவர்த்தியின் புதல்வர்கள் நால்வரும் ஒருவரையொருவர் வீரத்தில் மிஞ்சினார்கள். அவர்களில் ஒருவன் பாண்டிய நாட்டுப் போரில் உயிர் துறந்தான். மூத்த மகனாகிய இராஜாதித்தனோ, சமுத்திரம் போல் பொங்கி வந்த இரட்டை மண்டலக் கன்னர தேவனின் பெரும் படையுடன் தக்கோலத்தில் போர் தொடுத்து, அம் மாபெரும் சைன்யத்தை முறியடித்த பிறகு, போர்க்களத்திலேயே வஞ்சனையினால் கொல்லப்பட்டு, 'யானைமேல் துஞ்சின தேவன்' ஆயினான். கண்டராதித்தர் சிவஞானச் செல்வராயினும் அவரும் வீரத்தில் குறைந்தவராக இல்லை. பின்னர், ஆற்றூர்த் துஞ்சிய அரிஞ்சயனைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அரிஞ்சயனுடைய குமாரர் சுந்தர சோழர் காலத்தில், தக்கோலப் போருக்குப் பிறகு சிறிது மங்கியிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் புகழ் மீண்டும் மகோந்நத மடைந்தது.

இவ்வாறு வழி வழியாக வந்த வீர பரம்பரையில் பிறந்தவர்களில் ஆதித்த கரிகாலனுக்கு ஒப்பாருமில்லை, மிக்காருமில்லை என்று மக்களின் ஏகோபித்த வாக்கே எங்கும் கேட்கக் கூடியதாயிருந்தது. பன்னிரண்டாம் வயதில் சேவூர்ப் போர்க்களத்தில் அவன் புரிந்த வீரதீர சாகஸச் செயல்கள் அர்ச்சுனன் மகனான அபிமன்யுவின் புகழையும் மங்கச் செய்து விட்டதல்லவா?

இத்தகைய வீராதி வீரன் சில வருட காலமாகத் தஞ்சைக்கு வராமல் காஞ்சியிலேயே தங்கியிருந்த காரணம் பற்றிப் பலவித வதந்திகள் உலாவி வந்தன. சிற்றரசர்கள் சூழ்ச்சி செய்து மதுராங்

தகனுக்குப் பட்டம் கட்டும் நோக்கத்துடன் ஆதித்த கரிகாலனைத் தஞ்சைப் பக்கம் வராதபடி செய்து வருகிறார்கள் என்பது ஒரு வதந்தி. முன்னொரு காலத்தில் கரிகால் வளவன் வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்று இமயமலையின் உச்சியில் புலிக்கொடியை நாட்டிவிட்டு வந்ததுபோல், அதே பெயர் கொண்ட ஆதித்த கரிகாலனும் செய்ய விரும்பிச் சபதம் செய்திருக்கிறான் என்றும், அந்தச் சபதம் நிறைவேறாமல் அவன் தஞ்சைக்குத் திரும்ப விரும்பவில்லை யென்றும், அதற்குப் பழுவேட்டரையர் முதலியவர்கள் குறுக்கே நின்று தடுத்து வருகிறார்கள் என்றும் இன்னொரு வதந்தி பரவி யிருந்தது.

எனவே, திடீர் என்று ஒரு நாள் ஆதித்த கரிகாலன் இறந்து விட்டான் என்றும், சம்புவரையரின் மாளிகையில் வஞ்சனையினால் கொல்லப் பட்டான் என்றும் செய்தி பரவவே, சோழ நாட்டு மக்களின் உள்ளக் கிளர்ச்சி எப்படியிருந்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

அந்த வீர புருஷனுக்கு இறுதி மரியாதை செய்வதற்கு மக்கள் லட்சக் கணக்கிலே திரண்டு வந்து சேர்ந்ததிலும் வியப்பில்லைதானே?

ஊர்வலம் தஞ்சையை அணுகிய போது, ஜனக்கூட்டம் ஜனசமுத்திரமாகவே ஆகிவிட்டது. தஞ்சை நகர மக்களும், தஞ்சைக் கோட்டையைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த தென் திசைப் படை வீரர்களும் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து கொண்டார்கள். அவர்களை யெல்லாம் கோட்டைக்குள் அநுமதித்தால் பல விபரீதங்கள் நேரிடலாம் என்று முதன் மந்திரி அநிருத்தர் எச்சரித்ததின் பேரில், துயரக் கடலில் மூழ்கி யிருந்த சக்கரவர்த்தியும் அவருடைய குடும்பத்தாரும் கோட்டைக்கு வெளியிலேயே வந்து விட்டார்கள்.

சுந்தர சோழரைப் பார்த்ததும், அந்த மாபெரும் கூட்டத்தில் ஒரு பேரிரைச்சல் எழுந்தது. "சோழ நாட்டைச் சுந்தர சோழர் அரசு புரிந்த போது 'ஹா' என்ற சத்தமே கேட்டதில்லை" என்று சிலாசாஸனங்கள் சொல்லுகின்றன. ஆதித்த கரிகாலரின் மரணத்துக்கு முன்னால் குடிகொண்டிருந்த நிலைமை அச் சிலாசாஸனங்களில் பொறிக்கப் பட்டிருக்கின்றன.

இன்றைக்கோ, "ஹா! ஹா!" "ஐயையோ!" என்ற சத்தங்கள் லட்சக்கணக்கான குரல்களில் எழுந்தன. அபிமன்யுவைப் பறிகொடுத்த அர்ச்சுனனுடைய நினைவு அநேகருக்கு வந்தது. ஆனால் அபிமன்யுவோ பகைவர் கூட்டத்துக்கு மத்தியில் தன்னந் தனியாக நின்று அஸகாய சூரத்தனங்கள் செய்து விட்டு உயிரை விட்டான்.

இங்கேயோ ஆதித்த கரிகாலன் மதுராந்தகனின் மண்ணாசையினாலும் சிற்றரசர்களின் அதிகார வெறியினாலும் சூழ்ச்சிக்கு ஆளாகிக் கொல்லப்பட்டான். மக்களின் மனத்தில் குடிகொண்டிருந்த இந்த எண்ணத்தை உறுதிப்படுத்தும் காரியங்களும் வெளியிலே நடந்தன.

ஆதித்த கரிகாலருடைய சடலம் தஞ்சைக் கோட்டைக்கு வெளியே எல்லாரும் வந்து பார்க்கும்படியாக வைக்கப் பட்டிருந்தது. அனைவரும் வந்து பார்த்துக் கண்ணீர் விட்டுவிட்டுப் போனார்கள். ஆனால் மதுராந்தகன் மட்டும் வரவில்லை. பழுவேட்டரையர்களும் வரவில்லை.

பழுவேட்டரையர்கள் தங்கள் நண்பர்களைச் சைன்யங்களுடன் ஒன்று சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று வதந்தி பரவவும் ஆரம்பித்திருந்தது.

எனவே, ஆதித்த கரிகாலருக்கு வீர மரணத்துக்குரிய முறையில் ஈமச் சடங்குகள் நடந்து, சக்கரவர்த்தியின் குடும்பத்தினர் தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்த பிறகும் ஜனக் கூட்டம் விரைவாகக் கலையவில்லை.

"மதுராந்தகன் வீழ்க!" "பழுவேட்டரையர்கள் வீழ்க!" என்னும் கோஷங்கள் முதலில் இலேசாக எழுந்தன. நேரமாக, ஆக, இந்தக் கோஷங்கள் பலம் பெற்று வந்தன.

திடீரென்று ஜனக் கூட்டத்தில் ஒரு பகுதியினர் கோட்டைக் கதவுகளை இடித்து மோதித் திறந்து கொண்டு தஞ்சை நகருக்குள் பிரவேசித்தார்கள். முதலில் அவர்கள் பழுவேட்டரையர்களின் மாளிகைக்குச் சென்றார்கள். வெளியிலே நின்று "பழுவேட்டரையர்கள் வீழ்க!" என்று சத்தமிட்டார்கள்.

முதன் மந்திரி அநிருத்தரின் கட்டளையின் பேரில் வேளக்காரப் படைவீரர்கள் வந்து ஜனங்களைக் கலைந்து போகச் செய்ய நேர்ந்தது.

இதற்கிடையில், மதுராந்தகத் தேவன் அநிருத்தரின் வீட்டில் ஒளிந்து கொண்டிருக்கிறான் என்பதாக ஒரு வதந்தி பரவியது. ஜனங்கள் அநிருத்தரின் வீட்டைப் போய்ச் சூழ்ந்து கொண்டார்கள்.

"எங்கே அந்தப் பேடி மதுராந்தகன்? வெளியே வரச் சொல்லுங்கள் மதுராந்தகனை!" என்று கத்தினார்கள்.

அச்சமயம் உண்மையாகவே மதுராந்தகன் அநிருத்தரின் வீட்டுக்குள்ளிருந்தான். வெளியிலே ஜனங்களின் கூக்குரலைக் கேட்டு விட்டு, அவன் நடுநடுங்கினான். அநிருத்தரைப் பார்த்து, "முதன் மந்திரி! என்னை எப்படியாவது கோட்டைக்கு வெளியே அனுப்பி விடுங்கள். ரகசியச் சுரங்க வழியாக அனுப்பி விடுங்கள். என்னை ஆதரிக்கும் நண்பர்களுடனே நான் போய்ச் சேர்ந்து கொள்கிறேன். இந்த உதவியைத் தாங்கள் செய்யும் பட்சத்தில் நான் சோழ சிம்மாதனத்தில் ஏறும்போது தங்களையே முதன் மந்திரியாக வைத்துக் கொள்ளுவேன்" என்று சொன்னான்.

"ஐயா! சிங்காதனம் ஏறுவதைப் பற்றி இப்போது ஏன் பேச வேண்டும்? இன்னும் சுந்தர சோழச் சக்கரவர்த்தி உயிருடன் இருக்கிறாரே" என்றார் முதன் மந்திரி அநிருத்தர்.

"சுந்தர சோழர் தம் குமாரனுக்கு சமக்கடன் செய்துவிட்டுத் திரும்பி வந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? அவர் முகம் எவ்வாறு பேயடித்தது போலிருந்தது என்பதைக் கவனிக்கவில்லையா? நான் இந்த மச்சு மேடையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன். அதிக காலம் இனி உயிரோடு இருக்க மாட்டார். அருள்மொழி வர்மனாவது நானாவது சிங்காதனம் ஏறி இந்த ராஜ்யத்தை ஆள வேண்டும். சுந்தரசோழர் எனக்குப் பட்டம் கட்டவே பிரியப் படுகிறார். நீங்களும் அன்னையும் எதற்காக அதற்குக் குறுக்கே நிற்க வேண்டும்?" என்றான் மதுராந்தகன்.

"இளவரசே! தங்கள் அன்னை குறுக்கே நிற்பதற்குக் காரணம் இல்லாமல் போகுமா? அதோ கேளுங்கள், இந்த வீட்டைச் சூழ்ந்திருக்கும் மக்களின் கூச்சலை. சுந்தர சோழர் இஷ்டப் பட்டால் மட்டும் போதுமா? சோழ நாட்டு மக்கள் இஷ்டப்பட வேண்டாமா?" என்று கூறிவிட்டு, "ஆகா! இது என்ன?" என்று அநிருத்தர் வீதியில் எட்டிப் பார்த்தார்.

பழைய கூக்குரலுக்குப் பதிலாக இப்போது "அருள்மொழிவர்மர் வாழ்க!" "பொன்னியின் செல்வர் வாழ்க!" "ஈழங்கொண்ட வீராதி வீரர் வாழ்க!" என்ற கோஷங்கள் கிளம்பின.

கம்பீரமான குதிரை மேலேறி அருள்மொழி வர்மர் அங்கே வந்து கொண்டிருந்தார். அவரைப் பின் தொடர்ந்து அத்தனை ஜனங்களும் போனார்கள். சில நிமிஷ நேரத்துக்கெல்லாம் அநிருத்தர் வீட்டின் வெளிப்புறம் வெறுமையாகி விட்டது. அநிருத்தருக்கு முன்னாலிருந்து மதுராந்தகனும் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் பொறாமைத் தீயினால் கோவைப் பழம் போலச் சிவந்தன. "ஆகா! இந்தப் பிள்ளையிடம் அப்படி என்னதான் வசீகரம் இருக்கிறதோ?" என்று தனக்குத் தானே சொல்லிப் பொருமிக் கொண்டான்.

அநிருத்தர், "இளவரசே! ஈழத்து ராணியைக் கொன்றவனைப் பின் தொடர்ந்து சின்னப் பழுவேட்டரையர் ஓடியபோது நீர் அந்தப் பாதாளச் சுரங்க வழியில் இருந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

"பொன்னியின் செல்வன் யானைப் பாகன் வேஷத்தில் அரண்மனைக்கு வந்த பிறகு எனக்கு மிக்க மனச் சோர்வு உண்டாயிற்று. அவனும் நானும் ஒரே சமயத்தில் இந்தக் கோட்டைக்குள்ளிருக்கப் பிரியப்படவில்லை. பழுவேட்டரையர் சுரங்க வழியை எனக்குக் காட்டிக் கொடுத்திருந்தார். அதன் வழியாகப் போய் விடலாமா என்று யோசித்துக் கொண்டு அரண்மனைத் தோட்டத்தைச் சுற்றிக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவன் சுரங்கப் பாதை வழியாக வெளியே வருவதைப் பார்த்தேன். அவன் என்னை நெருங்கி, 'இளவரசே! தங்களைப் பார்க்கத்தான் வந்தேன். பெரிய பழுவேட்டரையரும், கந்தமாறனும் தங்களை உடனே அழைத்து வரும்படி என்னை அனுப்பினார்கள். தங்கள் சிம்மாதன உரிமையை ஆதரித்து நிற்கப் பெரிய சைன்யங்கள் தயாரா யிருக்கின்றன' என்றான். அவனுடைய தோற்றம் எனக்குச் சிறிது சந்தேகத்தை உண்டாக்கிற்று.

'பெரிய சைன்யம் தயாராகி யிருந்தால் நான் ஏன் வெளியே வர வேண்டும்? அவர்களே இங்கு வந்து கொடும்பாளூர்ப் படைகளைத் தோற்கடித்து விட்டு என்னைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கட்டுமே!' என்றேன்.

அந்த மனிதன், 'இளவரசே! அது மட்டுமல்ல. தங்களுடைய பிறப்பைக் குறித்து ஒரு பயங்கரமான மர்மம் இருக்கிறது. அதை வேறு யாரும் உங்க



...ளுக்குச் சொல்லத் துணிய மாட்டார்கள். நான் சொல்வேன்' என்றான்.

'அப்படியானால் வா! உடனே போகலாம்' என்றேன் நான். அதற்கு அவன், 'முதன் மந்திரி அநிருத்தருக்கு ஒரு செய்தி சொல்ல வேண்டியிருக்கிறது. அதைச் சொல்லிவிட்டு வருகிறேன். நீங்கள் முதலில் போய்ச் சுரங்கப் பாதையில் ஒளிந்திருங்கள்' என்றான்.

அதன் பேரில் பொக்கிஷ நிலவறைக்குள் போய் நான் காத்திருந்தேன். முதன் மந்திரி! தங்களை அவன் வந்து பார்த்தானா? என் பிறப்பைக் குறித்த பயங்கரமான மர்மம் என்னவாக இருக்கக் கூடும்?" என்றான் மதுராந்தகன்.

"இளவரசே! தங்களுக்கு அதை வெளியிட்டுச் சொல்லும் உரிமை பெற்றவர் தங்கள் அன்னை செம்பியன்மாதேவி ஒருவர்தான். எனக்கு ஓரளவு தெரிந்திருந்தாலும் நான் அதைச் சொல்லக் கூடாது" என்றார் அநிருத்தர்.

இந்தச் சமயத்தில் அம்மாளிகையின் வாசலில் மறுபடியும் கலகலப்புச் சத்தம் கேட்டது. முதன் மந்திரி எட்டிப் பார்த்தார். "ஆகா! இதோ உங்கள் அன்னையே வந்து விட்டார்" என்றார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் செம்பியன்மாதேவி அநிருத்தரின் வீட்டுப் பெண்மணிகளைப் பார்த்துப் பேசிவிட்டு மேல் மாடிக்கு வந்தார். அந்தத் தேவியின் முகத்தில் அப்போது சோகம் ததும்பிக் கொண்டிருந்தது. அநிருத்தர் எழுந்து உபசரித்துச் சுட்டிக் காட்டிய ஆசனத்தில் தேவி உட்கார்ந்தார். சிறிது நேரம் தரையைக் குனிந்து பார்த்த வண்ணமாக இருந்தார். அந்த மேல் மாடத்திலும் மாளிகைக்கு வெளியிலே வீதியிலும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. பின்னர் செம்பியன் மாதேவி மதுராந்தகனையும், அநிருத்தரையும் ஒரு முறை பார்த்துவிட்டு, "ஐயா! என் கணவர் என் தலைமீது இந்தப் பாரத்தைச் சுமத்திவிட்டு மேற்றிசைக்கு எழுந்தருளி விட்டார். தவறு செய்தது என்னவோ நான்தான். ஆனால் அவர் இச்சமயம் இருந்திருந்தால் நான் இவ்வளவு துன்பப்பட நேர்ந்திராது" என்றாள்.

அப்போது மதுராந்தகன் கண்களில் கோபக் கனல் பறக்க, "நீ ஏன் இப்படி வேதனைப்படுகிறாய்? ஏன் அடிக்கடி என் தந்தையின் பெயரை எடுக்கிறாய்? தஞ்சாவூர்ச் சிம்மாதனத்தில் நான் ஏறப் போவதென்னமோ நிச்சயம். அதற்குத் தடையாக இருந்தவர்களில் ஒருவன் இறந்து போனான். அருள்மொழி வர்மனோ என்னைவிட வயதில் சிறியவன். நான் உயிரோடு இருக்கும்போது அவனுக்கு

ஒருநாளும் பட்டம் கட்ட மாட்டார்கள். நீ மட்டும் குறுக்கே நில்லாமல் கருணை செய்ய வேண்டும். அம்மா! பெற்ற பிள்ளைக்குத் துரோகம் செய்யும் அன்னையைப் பற்றி யாராவது கேள்விப் பட்டதுண்டா? சிவ பக்த மணியாகிய நீ ஏன் எனக்குத் துரோகம் செய்யப் பார்க்கிறாய்?" என்றான்.

"என் குழந்தாய்! பெற்ற பிள்ளைக்குத் தாய் விரோதமாக இருப்பது பயங்கரமான துரோகம்தான். ஆனால் என் கணவர் எனக்கு அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய கட்டளையை நிறைவேற்றுவது என் கடமை. சொல்லுகிறேன் கேள்! மண்ணாசை ரொம்பப் பொல்லாதது. ராஜ்யத்தின் மேல் ஆசை அதைவிடக்கொடியது. தலையிலே முடி சூடிக் கொண்டிருப்பவர்களைப் போல் இவ்வுலகத்தில் கவலைக்குள்ளாகிறவர்கள் வேறு யாருமில்லை. சிங்காதனத்தில் வீற்றிருப்பவர்களைப் போல் மன அமைதியின்றிச் சங்கடப்படுபவர்களும் யாரும் இல்லை. தலையிலே கிரீடம் வைத்துக் கொண்டிருந்த காரணத்தினால் அல்லவா வீரபாண்டியன் உயிரைவிட நேர்ந்தது? பூலோக ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு மேலானது சிவலோக சாம்ராஜ்யம். நாம் இந்த ஊரை விட்டே போய் விடுவோம் வா. க்ஷேத்திர தரிசனம் செய்து கொண்டு கைலயங்கிரி வரையில் போவோம். சாக்ஷாத் கைலாசநாதரின் கருணைக்குப் பாத்திர மாவோம்."

"ஆகா! கைலாச யாத்திரை போவதற்குத் தங்களுக்குத் தக்க பருவம்தான். எனக்கு இன்னும் பிராயம் ஆகவில்லை. இந்த உலகத்தின் சுக துக்கங்கள் எதையும் நான் இன்னும் அனுபவிக்கவில்லை. உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக் கொண்டு 'சிவ சிவா' என்று பைத்தியக்காரனைப் போல் அலைந்து திரியும்படி என்னை நீ வளர்த்து விட்டாய். அந்தப் பரமசிவனுடைய பெருங் கருணையினாலேயே என்னிடம் இப்போது ராஜ்யம் நெருங்கி வந்திருக்கிறது. அதை ஏன் நான் கைவிட வேண்டும்?" என்று கேட்டான் மதுராந்தகன்.

"அப்பனே! உன்னை நெருங்கி வந்திருக்கும் ராஜ்யம் எத்தனையோ அபாயங்களுடன் சேர்ந்து வந்திருக்கிறது. நீ சிம்மாதனம் ஏறுவதற்கு ஒரு தடை நீங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் இறந்து விட்டான் என்று சொன்னாய். சற்று முன்னால் இந்த வீட்டைச் சுற்றி நின்று கொண்டிருந்த ஜனங்கள் கூச்சலிட்டது உன் காதில் விழவில்லையா? மதுராந்தகா! ஆதித்த கரிகாலன் இறந்ததற்கு நீயும் பழுவேட்டரையர்களுமே காரணம் என்று மக்கள் நினைக்கிறார்கள். உன்னை எப்படிச் சக்கரவர்த்தியாக அவர்கள் ஒப்புக் கொள்வார்கள்?"

"அம்மா! அதையெல்லாம் ஜனங்கள் வெகு சீக்கிரம் மறந்து விடுவார்கள். என்னைச் சிங்காதனத்தில் ஏற்றிவிட்டால் என்னையே சக்கரவர்த்தி என்று ஒப்புக் கொள்வார்கள். இன்னும் சொல்கிறேன் கேள். கரிகாலனுடைய மரணத்துக்கு யார் காரணம் தெரியுமா? அருள்மொழி வர்மரின் அருமைச் சிநேகிதன் வந்தியத்தேவன்தான். சம்புவரையர் வீட்டில் கரிகாலன் செத்துக் கிடந்த இடத்தில் வந்தியத்தேவன்தான் இருந்தானாம். சம்புவரையரையும், வந்தியத்தேவனையும் பாதாளச் சிறையில் போட்டிருக்கிறார்கள். தனக்குச் சிம்மாதனம் கிடைக்கும் பொருட்டுத் தமையனைக் கொலை செய்ய ஏற்பாடு செய்தவன் அருள்மொழி வர்மன். இது மட்டும் ஜனங்களுக்குத் தெரியட்டும். அப்புறம் பொன்னியின் செல்வரின் கதி என்ன ஆகிறதென்று பார்க்கலாம்."

செம்பியன்மாதேவி தம் கண்களில் கனல் வீச, "அட பாவி! கருணையே உருக்கொண்ட அருள்மொழியைப் பற்றி என்ன வார்த்தை சொல்கிறாய்? உன்னைப் போன்ற துராசை பிடித்தவனையே அவன் கோவிலில் வைத்துக் கும்பிடத் தயாராக இருக்கிறானே. அவனைப் பற்றி நீ மறுபடியும் இப்படிச் சொன்னால் நீ எரிவாய் நரகத்துக்குத்தான் போவாய். உனக்கு இம்மையிலும் மறுமையிலும் கதி மோட்சம் கிடையாது."

இதைக் கேட்டதும் மதுராந்தகன் குதித்தெழுந்தான். "அடி பேயே! உன் சொந்த மகனுக்குச் சாபம் கொடுக்கிறாய். என்னுடைய விரோதிக்கு ஆசி கூறுகிறாய். நீ என்னுடைய தாயாராக இருக்க முடியுமா? இல்லவே இல்லை" என்று மதுராந்தகன் உள்ளம் நொந்து கொதித்துக் கூறினான்.

அப்போது செம்பியன் மாதேவி "அப்பா! உனக்கு நான் இதை என்றைக்கும் சொல்லவேண்டாமென்றிருந்தேன். உன்னுடைய பிடிவாதத்தினால் சொல்லும்படி செய்து விட்டாய். உண்மையிலேயே நான் உன்னைப் பெற்ற தாயார் அல்ல. நீ என் மகனும் அல்ல" என்றாள்.

மதுராந்தகன் கம்பிய குரலில், "ஆகா! நான் சந்தேகித்தது உண்மையாகப் போய் விட்டது. நீ என் தாயாரில்லா விட்டால் என் தாயார் யார்? நான் உன் மகன் இல்லை யென்றால் பின் யாருடைய மகன்?" என்றான்.

தேவி முதன் மந்திரி அநிருத்தரைப் பார்த்து, "ஐயா! தாங்கள் சொல்லுங்கள். என்னுடைய அவமானத்தை நானே சொல்லும்படி தயவு செய்து வைக்க வேண்டாம்" என்றாள்.

முதன் மந்திரி அநிருத்தர், மதுராந்தகனைப் பார்த்துச் சொன்னார்: "இளவரசே! தங்களைச் சின்னஞ் சிறு குழவிப் பருவத்திலிருந்து எடுத்து வளர்த்த அன்னையை மனம் நோகும்படி செய்து விட்டீர்கள். எப்படியும் ஒரு நாள் தாங்கள் உண்மையை அறிந்து கொள்ள வேண்டியதுதான். இப்போதே அதைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்றார்.

* * *

செம்பியன்மா தேவிக்குக் கல்யாணமான புதிதில் தன் வயிற்றில் ஒரு குழந்தை பிறக்க வேண்டுமென்றும் அக்குழந்தை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக வேண்டுமென்றும் ஆசை இருந்தது. அவள் கர்ப்பந் தரித்து, குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், அவளுடைய கணவர் வெளியூருக்குச் சென்றிருந்தார். அதே சமயத்தில் அதே காலத்தில் அக்காளும் தங்கையுமான இரண்டு ஊமை ஸ்திரீகள் அரண்மனைத் தோட்டத்தில் குடியிருந்தார்கள். அவர்களில் ஒருத்தி கர்ப்பந் தரித்துக் குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். செம்பியன் மாதேவி க்ஷேத்திராடனம் சென்றிருந்தபோது அனாதையாகக் காணப்பட்ட அந்தக் கர்ப்ப ஸ்திரீயை அழைத்து வந்திருந்தாள். அவளுடைய சகோதரி தஞ்சாவூருக்கருகில் இருக்கிறாளென்று கேள்விப்பட்டுக் கர்ப்ப ஸ்திரீக்கு உதவி செய்வதற்காக அவளை வரவழைத்துக் கொண்டிருந்தாள்.

செம்பியன் மாதேவிக்குக் குழந்தை பிறந்தது. முதன் மந்திரி அநிருத்தர் ராஜ்யத்துக்குப் பிள்ளை பிறந்திருப்பதன் பொருட்டு வாழ்த்துக்கூற வந்தார். அப்போது செம்பியன் மாதேவி கண்ணீர் விட்டு 'கோ'வென்று அழுதாள். பிறந்த குழந்தை உயிரில்லாமல் அசைவற்றுக் கட்டையைப் போல் கிடந்தபடியால் அவ்வாறு அவள் துக்கப்பட்டாள்.

"ஐயா! என் கணவன் வந்து கேட்கும்போது நான் என்ன பதில் சொல்வேன்?" என்று விம்மி யழுதாள். அவளுடைய துயரத்தைக் கண்டு பொறுக்க முடியாமல் அநிருத்தர் ஒரு யோசனை கூறினார். தோட்டத்தில் குடியிருந்த ஊமைப் பெண்ணுக்கு ஒரு ஆணும், ஒரு பெண்ணுமாக இரட்டைக் குழந்தைகள் பிறந்திருப்பதை அவர் அறிந்திருந்தார். அந்த ஊமைப் பெண்ணிடம் சென்று குழந்தைகளை அங்கேயே விட்டு விட்டுப் போய் விட்டால், அவர்கள் அரண்மனையில் வளர்வார்களென்று ஜாடையினால் தெரிவித்தார். அந்த ஊமைப் பெண் வெறி பிடித்த பைத்தியக்காரிபோல் இருந்தாள். முதலில் அவள் குழந்தைகளைக் கொடுக்க மறுத்தாள். சற்று நேரங் கழித்துக் குழந்தைகளை விட்டு விட்டு ஓடியே விட்டாள். உடனே அநிருத்தர் அவளுடைய தங்கையைக் கொண்டு ஆண் குழந்தையைச் செம்பியன்மா தேவியிடம் கொண்டு விடச் செய்தார். உயிரின்றிக் கட்டை போல் இருந்த குழந்தையை ஒருவருக்கும் தெரி

யாமல் கொண்டு போய்ப் புதைத்து விடும்படி ஊமைத் தங்கையிடம் கொடுத்தனுப்பி விட்டார். மற்றொரு பெண் குழந்தையைத் தன்னுடைய வீட்டுக்கு எடுத்துச் சென்று அங்கிருந்த தன்னுடைய சீடன் ஆழ்வார்க்கடியானிடம் கொடுத்துப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பி வைத்து விட்டார்.

இவ்விதம் குழந்தை மாற்றம் செய்தது செம்பியன் மாதேவியின் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. ஒருநாள் கண்டராதித்த தேவரிடம் உண்மையை ஒப்புக் கொண்டு விட்டாள். அந்த மகான், "அதனால் பாதகமில்லை! பெண்ணே! யார் வயிற்றில் பிறந்த குழந்தையாக இருந்தால் என்ன? சிவபெருமான் அளித்த குழந்தைதான். உன் வயிற்றில் பிறந்த குழந்தையைப் போலவே வளர்த்து வா. ஆனால் வேறு குலத்தில் பிறந்த பிள்ளை சோழ சிங்காதனத்தில் ஏறக் கூடாது. அப்படிச் செய்வது குலத் துரோகமாகும். ஆகையால் சிறு பிராயத்திலிருந்தே இவனைச் சிவபக்தனாகும்படி வளர்த்து வருவோம். 'சோழ சாம்ராஜ்யம் வேண்டாம். சிவபக்தி சாம்ராஜ்யமே போதும்!' என்று இவனே சொல்லும்படி வளர்ப்போம். ஆனால் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இவனைத் தஞ்சாவூர் சிங்காதனத்தில் ஏற்றி வைப்பதற்கு மட்டும் நாம் உடந்தையாக இருக்கக் கூடாது. அந்தச் சந்தர்ப்பம் வரும்போது நான் உயிரோடு இல்லாவிட்டாலும் நீ உறுதியுடனிருந்து சோழர் குலத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

* * *

"மதுராந்தகா! நீ கண்டராதித்த தேவருடைய புதல்வனுமல்ல. செம்பியன் மாதேவி வயிற்றில் பிறந்த பிள்ளையுமல்ல. ஊர் சுற்றித் திரிந்த அனாதை ஊமைப் பெண்ணின் மகன். உன்னை இந்தத் தேவி தம் சொந்தக் குழந்தையைவிட நூறு மடங்கு அதிகமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். இப்போது அவருடைய கருத்துக்கு மாறாக நடக்காதே. தேவி சொல்வதைக் கேள். அதனால் உனக்கு நன்மையே விளையும்" என்றார் அநிருத்தர்.

## உதவிக்கு வந்தவன் பாடு!




கொரியாவில் சமாதானத்தை நிலைநாட்டச் சென்றுள்ள இந்திய ராணுவத்தைத் தென் கொரியா தலைவர் ஸிங்மென்-ரீ தீவிரமாகத் தாக்கி வருகிறார்.

# கோமளத்தின் காதலன்

வ. சா. நாகராஜன்

ரங்கநாத ஐயங்கார் கடிதத்தைப் பிரித்து மனத்துள் ஒரு தடவை படிக்க ஆரம்பித்தார். கடிதத்தில் உள்ள விஷயத்தை அறிய, அவர் மனைவியும் பிள்ளை கோவிந்தராஜனும் எதிரில் நின்று கொண்டிருந்தார்கள். கடிதத்தைப் படித்து முடித்ததும், "சண்பகம் போட்டிருக்கிறாள். அறுப்பு வேலை ஏகப்பட்டதாக இருக்கிறதனால் ராமானுஜத்தால் முடியவில்லையாம். முடிந்தால் ஒத்தாசையாக இருக்கக் கோவிந்தராஜனை அனுப்பச் சொல்லியிருக்கிறாள்" என்று சொன்ன ரங்கநாத ஐயங்கார் "ஏண்டா, கோவிந்தா, நமக்கு இன்னும் எவ்வளவு நாள்டா இருக்கிறது அறுப்பு!" என்று கேட்டார்.

"நாளைச் சாயங்காலத்தோடு முடிந்து விடுகிறது, அப்பா!" என்றான் கோவிந்தராஜன்.

"ஒத்தாசைக்கும் இல்லை; இத்தாசைக்கும் இல்லை. எல்லாம் அந்தக் கோமளத்தை இவன் கழுத்தில் கட்டுகிறதற்குத் தான் இந்த நாடகம் எல்லாம். நிலத்தைப் பெண் பேரில் எழுதிவை என்றால் மாத்திரம் முகத்தைத் தூக்கிக் கொள்கிறாள், உங்கள் தங்கை! தெரிந்ததா!" என்றாள் கோவிந்தராஜனின் தாயார்.

"நாளை ராத்திரிக்குக் கிளம்பிப்போய் ஒரு வாரம் இருந்து விட்டு வருகிறாயா!" என்று கோவிந்தராஜனைக் கேட்டார் ரங்கநாத ஐயங்கார்.

"சரி, அப்பா!" என்றான். கோவிந்தராஜன். கோமளத்தைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவில் அவன் உள்ளம் கிளுகிளுத்தது.

"இன்று தபாலில் ஒரு கார்டு எழுதிப் போட்டு விடு, ஸ்டேஷனுக்கு வண்டி அனுப்பச் சொல்லி!" என்று சொல்லி விட்டுத் தம் வேலையைக் கவனிக்கச் சென்றார் ரங்கநாத ஐயங்கார்.

## 2

காலை ஏழு மணிக்கு ரயிலை விட்டு இறங்கிய கோவிந்தராஜனை 'ஸ்டேஷன் கேட்'டின் அருகில் நின்ற படியே பண்ணை ஆள் சோமு உற்சாகத்துடன் வரவேற்றான். கோவிந்தராஜன் வண்டியில் ஏறிக்கொண்டதும், சோமு மாடுகளை நோக்கி ஒரு தடவை சாட்டையைச் சொடுக்கினான்.

"ஊரிலே எல்லாரும் சௌக்கியம் தானே, சோமு! இந்த வருஷம் விளைச்சல் எப்படி!" என்று கேட்டான் கோவிந்தராஜன்.

"விளைச்சல் போடு போடுன்னு போடுதுங்க. கீழ காத்தங்கா பதினாறுதான் தேறும்னுங்க, ஐயா. பதினேழு தேறுவிட்டால் நான் மண்வெட்டியையே இனிமேல் எடுக்கிறதில்லேன்னு முடிவு செய்தேன்.......பாருங்க, பதினெட்டுக்கு மேலே போச்சு கண்டு முதல்..."

இந்தப் பேச்சு கோவிந்தராஜனுக்குச் சுவாரஸ்யம் அளிக்கவில்லை. சோமு, கோமளத்தைப் பற்றி ஏதாவது சொல்ல மாட்டானா என்று தான் அவன் நினைத்தான்.

கோமளம் கோவிந்தராஜனின் அத்தை பெண். பதினாறு வயதாகி யௌவனத்தில் பூத்துக் குலுங்குபவள். அவளுக்கு இத்தனை நாட்களுக்குள்



கல்யாணம் ஆகியிருக்க வேண்டும். மாமா பிள்ளை கோவிந்தராஜன் இருந்தான். ஆனால் அவனுடைய அம்மாவுக்கு அதிலே முழு இஷ்டம் இல்லை. காரணம், கோமளத்தின் தகப்பனார் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்துக் கொஞ்சம் கை சளைத்திருந்தார். நிலம் இருந்தது; ஆனால் கையில் பணம் இல்லை. கோமளத்துக்குக் கல்யாணம் பண்ண வேண்டும் என்றால் நிலத்தை விற்றுத்தான் ஆகவேண்டும். அந்த விஷயம் அவர் மனத்தைக் கலக்கியது. கோமளத்தின் தகப்பனாரின் நிலைமையைக் கோவிந்தராஜனின் தாயார் நன்றாக அறிந்திருந்தாள்.

கோவிந்தராஜன் ரங்கநாத ஐயங்காரின் ஏக புத்திரன். ஐந்தரை அடி உயரத்தில் நல்ல ஆகிருதியுடன் இருந்தான். அவனுக்குப் பெண் கொடுக்க உத்தியோகஸ்தர்களும் நிலம் படைத்தவர்களும் 'நான், நீ' என்று போட்டிபோட்டார்கள். இதை அறிந்திருந்த சண்பகம், அண்ணாவிடம் தன் மூன்றாவது பெண் கோமளத்தைப் பற்றிப் பேச்சு எடுக்கவே பயப்பட்டாள். இதனால் ஒன்றும் பிடிபடாத வகையில் மாதங்களும் வருஷங்களும் ஓடிக் கொண்டிருந்தன.

ஆனால் கோவிந்தராஜனின் மனம் யாருக்குத் தெரியும்! கோமளம் குழந்தையிலிருந்தே நல்ல வளர்த்தி. போன வருஷம் அவளுடைய அக்கா குமுதாவின் கல்யாணத்தின் போதுதான் கோவிந்தராஜன் அவளைக் கடைசி தடவையாகப் பார்த்திருந்தான். குழந்தைப் பருவத்திலிருந்தே கோமளத்தின்பேரில் சிறுபிள்ளைக் காதல் கொண்டிருந்த கோவிந்தராஜன் தன் மன நிலையை ஒருவரிடமும் சொல்லாமல் தவித்துக் கொண்டிருந்தான்.

"ஹோ......!" என்று சொல்லி இரு மாட்டு முதுகிலேயும் தட்டிக் கொடுத்தான் சோமு. கோவிந்தராஜன் மனப் பிரமையிலிருந்து விடுபட்டுத் தன் நினைவுக்கு வந்து, வண்டியை விட்டுக் கீழே இறங்கினான்.

வாசல் திண்ணையில் அத்திம்பேர் ராமானுஜாச்சாரியும் ரேழியில் மறைந்திருந்த அத்தையும் "வா, கோவிந்தராஜா!" என்று வரவேற்றார்கள். உள்ளே சென்ற கோவிந்தராஜன், தூணைப் பிடித்துக் கொண்டு நின்ற கோமளத்தைப் பார்த்துத் திகைத்து நின்றான்.

அன்று வெள்ளிக் கிழமை. கோமளம் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து, கூந்தலைத் தழையத் தழையப் பின்னிக் கொண்டிருந்தாள். முகத்தில் பவுடர் மினுக்கு இல்லை. மஞ்சளும் எண்ணெய்ப் பள பளப்பும், 'பளீர்' என்று அந்த மாநிற முகத்துக்குச் சோபை யூட்டின. நெற்றியின் நடுவில் இருந்த குங்குமப் பொட்டு ஆளிடம் நேரில் பேசுவது போல் இருந்தது. கோமளம் தன் நீண்ட விழிகளால் அம்மாஞ்சியின் உருவத்தைப் பருகியபடியே சிரித்த முகத்துடன் மௌனமாக அவனை வரவேற்றாள்.

## 3

மறுநாள் காலை பத்து மணி இருக்கும். கோவிந்தராஜன் அறுப்பு வேலை முடிந்து வயலிலிருந்து திரும்பி வந்தான். நல்ல வெய்யில். முகம் எல்லாம் கறுத்து, தலை பரட்டையாக விரிந்து கிடந்தது. 'உஸ், அப்பாடா...!' என்று வீட்டுக்குள் நுழையப் போனவன் ரேழிக்கு எதிரில் முற்றத்துக்கு அப்பால் இருந்த வாசற்படியில் நின்று கொண்டிருந்த கோமளத்தைப் பார்த்ததும் அப்படியே நின்றான். வெய்யிலும் வியர்வையும் அவன் நினைவிலிருந்தே பறந்து போய் விட்டன.

ஆனால் கோமளம் எதிர் வாசற்படியில் ஒரு கணம் கூட நிற்கவில்லை. கோவிந்தராஜனைப் பார்த்ததும் சரேல் என்று பின் பக்கத்து வாசற்படி வழியாகச் சமையல் அறைப் பக்கம் விரைந்து விட்டாள். அவள் அங்கே ஒரு கணம்கூட நிற்காதது, கோவிந்த ராஜனுக்குச் 'சுருக்'கென்றது. மெல்லத் தாழ்வாரத்துக் குறட்டின் மேல் ஏறினான்.

"வாப்பா, கோவிந்தராஜா!" என்று ஒரு புதுக் குரல் கேட்டது. கோவிந்தராஜன் நிமிர்ந்து பார்த்தான். கூடத்து ஊஞ்சலில் அவனுடைய பம்பாய் பெரியப்பாவின் பிள்ளை ஸ்ரீகாந்தன் உட்கார்ந்து கொண்டிருப்பதைப் பார்த்ததும் அப்படியே அதிசயித்து நின்றான்.

"எப்பொழுது வந்தாய் நீ! வருவதாக லெட்டர் போடக் கூடாதோ!" என்றான் கோவிந்தராஜன்.

"முன் பின் தெரியாத உறவா கடிதம் எழுதி விட்டு வருவதற்கு! என் தங்கை பூமாவுக்குக் கல்யாணம் நிச்சயம் பண்ணுவதற்காக அப்பாவும் அம்மாவும் சென்னைக்கு வந்தார்கள். அவர்களுடன் நானும் வந்தேன். எனக்கு என்ன வேலை, சென்னையிலே! 'நீங்கள் மாப்பிள்ளையைத் தேடுங்கள், நான் அத்தையையும் சித்தப்பாவையும் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டு இங்கே வந்து விட்டேன்" என்றான் ஸ்ரீகாந்தன்.

குசலப் பிரச்னம் முடிந்த பிறகு, குளித்து விட்டு வருவதற்காக ஊஞ்சலை விட்டு எழுந்த கோவிந்தராஜன் மீண்டும் ஒரு தடவை ஸ்ரீகாந்தனை நன்றாகப் பார்த்தான். சிவப்பு நிற மேனி. தலையில் சுருட்டை சுருட்டையாக கிராப், அழகாகக் கிரீம் போட்டு வாரி விடப்பட்டிருந்தது. மழ மழவென்ற 'ஷேவ்' பண்ணிக் கொண்டிருந்த முகம். சற்று நீண்டு, பெரியப்பா மாதிரி வளைந்திருந்த மூக்கு, இடுப்பிலும் தூய வெள்ளை நிற வேஷ்டி. அதற்கேற்ற சட்டை, குறுகுறுத்த பார்வை—பார்க்க மிகவும் நன்றாகத்தான் இருந்தான். ஊஞ்சலிலிருந்து எழுந்த கோவிந்தராஜனின் கண்களில், சமையல் அறைக் கதவிடுக்கு வழியாகக் கூடத்தைப் பார்த்துக் கொண்டிருந்த கோமளத்தின் முகம் தெரிந்தது. அவன் மனம் காரணமே புரியாமல் ஏனோ தவித்தது. கூடத்தைக் கடந்து முற்றத்தில் இறங்கும்போது எதிரில் இருந்த நிலைக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டான். மூன்று நாட்களாக முக க்ஷவரம் செய்து கொள்ளாமல் வளர்ந்திருந்த ரோமம், சதா வெய்யிலில் அலைந்து அலைந்து கறுத்துப் போன முகம், தலை முழுவதும், வாரி விடாமல் பரந்திருந்த மயிர்,—சட்டென்று ஒரு கேள்வி அவன் மனத்தில் எழுந்தது. எதிரே ஸ்ரீகாந்தன் இருக்கும்போது, கோமளம் தன்னை விரும்புவாளா? கோவிந்தராஜன் எப்படி மாமா பிள்ளையோ, அப்படித்தானே ஸ்ரீகாந்தனும் இன்னொரு மாமா பிள்ளை! அன்று காலை வரை கோமளம் இருக்கும் அதே வீட்டில் இருக்கிறோம் என்ற ஒரு நினைவிலேயே சதா திளைத்துக் கொண்டிருந்த அவன் மனத்தில் எங்கிருந்தோ திடீரென்று ஒரு இனந் தெரியாத புதிய பாரம் வந்து அழுத்தியது.

கோவிந்தராஜன் குளித்து விட்டு வந்ததும் எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். கோவிந்த ராஜன் கோடியிலும், ஸ்ரீகாந்தன் நடுவிலும் அத்திம்பேர் முதலிலும் உட்கார்ந்தார்கள். கோமளம் அடுப்பில் வடை தட்டிக் கொண்டிருந்தாள்.

பாதி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது ஸ்ரீகாந்தன் ஒரு வடையை முறித்து உள்ளே போட்டுக் கொண்டே, "கோமளம் நன்றாக

வடை தட்டுகிறள் அத்தை. என் தங்கை பூமாவும் இருக்கிறளே, போன சங்கராந்தியின்போது வடை தட்டுகிறேன் என்று அடுப்புக்கு வந்தாள். அம்மா, 'வேண்டாம்!' என்று எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் மாவை உருட்டி அடுப்பில் போட்டாள். அவ்வளவுதான், 'சட புட' என்று சத்தம் வந்தது. 'ஐயோ! அம்மா' என்று அலறிப் புடைத்துக் கொண்டு கையை உதறினுள் பூமா. அப்புறம் மூன்று மாசம் அவள் சமையல் அறைப் பக்கமே தலை காட்டவில்லை!" என்று சொல்லிச் சிரித்தான். அத்தையும் அத்திம்பேரும் சிரித்தார்கள். கோவிந்தராஜன் கோமளத்தைப் பார்த்தான். அவளும் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனல் அவனுக்கு மாத்திரம் ஏனே சிரிப்பு வரவில்லை.

மத்தியானம் மூன்று மணி இருக்கும். கோவிந்தராஜன் ஒரு கூஜாவில் குடிக்கும் தண்ணீரையும், குடையையும் எடுத்துக்கொண்டு களத்து மேட்டுக்குப் புறப்பட்டான்.

களத்தில் வைக்கோல் போர்மேல் உட்கார்ந்து கொண்டிருந்த கோவிந்தராஜனின் மனம் தவித்துக் கொண்டிருந்தது. தன்னையும் ஸ்ரீகாந்தனையும் மனத்துள் திரும்பித் திரும்பி ஒப்பிட்டுப் பார்த்து அவன் மனம் குவிந்தது. ஆம், இதிலே சந்தேகம் என்ன! ஸ்ரீ காந்தன் ஒருவன் கண் எதிரே இருக்கும்போது கோமளம் போன்ற விவரம் தெரிந்த ஒரு பெண் எப்படித் தன்னையொத்த ஒரு வாலிபனை விரும்புவாள்! ஸ்ரீகாந்தனைப் போல் சதா சிரித்துச் சிரித்துப் பேசும் சாமர்த்தியம் தனக்கு இருக்கிறதா!...கோமளம் அதிகமாகச் சிரித்து அவன் பார்த்தது இல்லை. அமரிக்கையும், அடக்கமும் கொண்ட பெண் அவள். அன்று காலையிலிருந்து அவள் எவ்வளவு தடவைகள் வாய்விட்டுச் சிரித்திருக்கிறள்!—அதுவும் ஸ்ரீகாந்தன் இருந்த பக்கம் பார்த்து! இந்த மாதிரி நினைவுகளில் சூழ்ந்திருந்த அவன் மனம் களத்து வேலைகளைக் கவனிக்கவே இல்லை.

ஐந்தரை மணிக்குள்ளேயே களத்து வேலை ஆகிவிட்டது. கோவிந்தராஜன் குடையையும் கூஜாவையும் சோமுவிடம் கொடுத்து விட்டு வீட்டுக்குக் கிளம்பினுன். வாசல்படி தாண்டி ரேழியில் காலடி எடுத்து வைத்தபோது, உள்ளேயிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

"ஏன் அத்தை, கோமளத்துக்குப் பாடத் தெரியுமோ!—ஏன், கோமளம்!" என்று ஸ்ரீகாந்தன் கேட்டான்.

"கொஞ்சம் கொஞ்சம் தெரியும், பூமா பாடுவாளோ!" என்று கேட்டாள் கோமளம்.

"பூமாவா! பிரளயமாகப் பாடுவாள்; ஆனல் கேட்கத்தான் சகிக்காது!" என்றான் ஸ்ரீகாந்தன்.

அத்தையும் கோமளமும் சிரித்தார்கள்.

கோவிந்தராஜன் உள்ளே நுழைந்தான். முதலில் பின் கட்டுக்குப் போய் முகத்தைக் கழுவி வந்து ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு "கொஞ்சம் தண்ணீர் வேண்டும், அத்தை!" என்றான்.

கோமளம் உள்ளே போய் ஒரு டம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து ஆடிக் கொண்டிருந்த ஊஞ்சலுக்குப் பத்துத் தப்படி தள்ளித் தூணுக்குப் பக்கத்தில் தரையில் வைத்தாள். கோவிந்தராஜன் ஊஞ்சலிலிருந்து இறங்கிப் போய்த் தண்ணீரை எடுத்துக் குடித்தான்.



நிகழும் அக்டோபர் மாதம் 12உ மாலை கோகலே மண்டபத்தில் சோஷலிஸ்ட் தலைவர் ஸ்ரீ ஜெயப்பிரகாச் நாராயண் அவர்களின் பிறந்த தினக் கொண்டாட்டத்தை யொட்டிப் பொதுக் கூட்டம் நடைபெற்றது. பெருந் திரளான யுவர்கள் மண்டபத்தில் கூடி யிருந்தார்கள். ஸ்ரீ ஜகதீசய்யர், ஸ்ரீ கே. விநாயகம் எம்.எல்.ஏ., டாக்டர் மேனன் எம்.எல்.ஏ., 'கல்கி' ஆசிரியர், ஸ்ரீ சின்ன அண்ணாமலை முதலியவர் ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண் அவர்களுடைய தேசப் பணிகளையும், தியாகத்தையும், குணநிசயங்களையும் பாராட்டிப் பேசினார்கள்.

"என்ன கோமளம் இது! உன் அம்மாஞ்சி தானே அவன்! கையில் கொடுத்தால் என்ன! யாரோ மாதிரி எட்டி வைத்து விட்டுப் போகிறாயே!" என்று சிறிதும் விகல்பம் இல்லாமல் கோமளத்தைப் பார்த்துக் கேட்டான் ஸ்ரீகாந்தன்.

"என்ன இருந்தாலும் கிராம வாசம் இல்லையாடா! அது அப்படித்தான் இருக்கும்" என்று அவனுக்குச் சமாதானம் சொன்னாள் சண்பகம்.

## 4

மறுநாள் முழுவதும் முதல் நாள் நடந்தபடியே தான் நடந்தது. ஒவ்வொரு சிறு செய்கையையும் பார்த்துக் கோவிந்தராஜன் காரணம் இல்லாமல் மனம் குன்றினான். அவன் இதயத்தில் குறைவு மனப்பான்மை சூழ்ந்து அவனை வாட்டியது. அத்திம்பேருக்கும் அத்தைக்கும் கோமளத்தை ஸ்ரீகாந்தனுக்குக் கொடுப்பதில்தான் இஷ்டம் என்பது அவர்களுடைய ஒவ்வொரு பேச்சிலும் செய்கையிலும் நன்றாகத் தெரிந்தது. ஸ்ரீகாந்தனும் கோமளத்தை விரும்ப முடியாத நிலையில் இல்லை. ஆனால் கோமளம்! இவ்வளவு நாட்களாகத் தன்மீது மட்டற்ற அன்பு கொண்டிருந்தாள் என்று நினைத்த அவள்! எப்படியாவது அவளைத் தனிமையில் சந்தித்து அவளிடம் அதைப் பற்றி ஒரு வார்த்தை கேட்காவிட்டால் கோவிந்தராஜனின் மனம் வெடித்து விடும்போல் இருந்தது.

மறுநாள் காலை அவன் கொல்லைப்புறத்திலிருந்து உள்ளே வந்து கொண்டிருந்தான். கோமளம் கிணற்றடியில் ஜலம் இழுத்துக் கொண்டிருந்தாள்.

கோவிந்தராஜன் படி இறங்கி அவள் இருந்த இடத்துக்குச் சென்றான். அவன் இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. ஸ்ரீகாந்தன் எவ்வளவு சாதாரணமாகக் கோமளத்திடம் பேசுகிறான்! ஆனால் அவனால் மட்டும் அவளிடம் ஏன் அப்படிப் பேச முடியவில்லை!

கடைசியில் அவன் எப்படியோ துணிச்சலை வரவழைத்துக் கொண்டு, "கோமளம்!" என்று அழைத்தான். கோமளம் குடத்தைக் கிணற்றுப் படியில் வைத்து விட்டு ஒரு தடவை கோவிந்தராஜனின் ஆவல் நிறைந்த கண்களைப் பார்த்தாள். ஆனால் அடுத்த கணமே வெட்கத்துடன் கண்களைத் தாழ்த்திக் கொண்டு விட்டாள்.

"கோமளம்! உனக்கு...உனக்கு...என்னை..." என்று கோவிந்தராஜன் ஆரம்பித்தான். அவன் குரல் தடுமாறியது. மனம் தவித்தது. இதயமே இடம் விட்டுப் புரளுவதுபோல் இருந்தது.

அவன் பேச முடியாமல் தவிப்பதைப் பார்த்துக் கோமளம் ஒன்றும் புரியாமல் ஒரு தடவை அவனைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் கோவிந்தராஜன் துடிதுடித்துப் போனான்.

கோமளம், கோவிந்தராஜனின் முடிக்காமல் விட்ட கேள்விக்கு நேரிடையாகப் பதில் சொல்லவில்லை. "போங்கோ, அம்மாஞ்சி!" என்று சொல்லி விட்டுக் குடத்தை எடுத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள். கோமளத்தின் அந்தப் பதில் கோவிந்தராஜனின் உள்ளத்தில் கிளர்ச்சியைக் கிள்ளி விட்டது.

"போங்கோ, அம்மாஞ்சி!" என்று அவள் சொன்னதற்கு என்ன அர்த்தம்! அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லை, ஸ்ரீகாந்தனைப் பிடித்திருக்கிறது என்றுதானே அர்த்தம்! இவ்வாறு இல்லாத பல எண்ணங்கள் எல்லாம் எண்ணி அவன் மனம் புழுங்கிப் புழுவாய்த் துடித்தான்.

மறு நாள் காலையில் தன் அத்திம்பேரிடம் சென்று "ராத்திரி ரயிலில் ஊருக்குப் போகிறேன்!" என்றான் கோவிந்தராஜன்.

"என்னப்பா, அதற்குள்ளே அவசரம்!" என்று கேட்டார் அத்திம்பேர்.

"அறுதான் அறுப்பு வேலை ஆகிவிட்டதே! இன்னும் கொஞ்சந்தானே இருக்கிறது! ஊரிலேயும் எனக்கு வேலை இருக்கிறது!" என்றான்.

"நன்றாக இருக்கிறது. அறுப்பு வேலைக்காகவா இங்கே வந்தாய்! இன்னும் கொஞ்ச நாள் இருந்து விட்டுத்தான் போகணும்!" என்றாள் அத்தை.

"இல்லை, அத்தை! ஊரில் ஏகப்பட்ட வேலை பாக்கியிருக்கிறது. வயலில் உளுந்து பயறு தெளிக்கவேணும்" என்று பிடிவாதம் பிடித்தான் கோவிந்தராஜன்.

"வேலை இருந்தால் சரி!" என்றார் அத்திம்பேர்.

அன்று மத்தியானம் சென்னையிலிருந்து கடிதம் வந்தது. பூமாவுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகும்போல் இருக்கிறது என்றும், தன்னால் உடனே வர முடியாமல் இருப்பதால், தங்கையை



யும் அவள் கணவரையும் சென்னைக்கு வரும்படி எழுதியிருந்தார் கோவிந்தராஜனின் பெரியப்பா.

"நீயும் சென்னைக்கு வாயேன், கோவிந்து!" என்று அழைத்தான் ஸ்ரீகாந்தன்.

"நான் வருவது இருக்கட்டும். நீ இவ்வளவு தூரம் வந்து விட்டுச் சித்தப்பாவையும் சித்தியை யும் பார்க்காமல் போகப் போகிறாயா!" என்று கோவிந்தராஜன் கேட்டான்.

"நான் அவசரப்பட்டுக் கொண்டு பம்பாய்க் குப் போகப் போகிறதில்லை. சென்னைக்குப் போய் விட்டு நிச்சயமாக ஊருக்கு வருகிறேன்" என்றான் ஸ்ரீகாந்தன்.

அன்று சாயங்காலம் கோவிந்தராஜன் தான் கொண்டுவந்திருந்த துணிமணிகளை ஒரு பெட்டியில் அடைத்து எடுத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பி னான். வாசலில் வண்டி பூட்டி நின்றது. ஊஞ்ச லில் அத்திம்பேரும் ஸ்ரீகாந்தனும் உட்கார்ந்திருந் தார்கள். அத்தை கூடத்தில் நின்று கொண்டிருந் தாள். கோமளம் சமையல் அறைக் கதவைப் பிடித்துக் கொண்டு நின்று கொண்டிருந்தாள்.

கோவிந்தராஜன் அத்திம்பேரிடமும் ஸ்ரீ காந்த னிடமும் சொல்லிக் கொண்டு திரும்பிவிட்டான். அவன் கோமளத்தினிடம் சொல்லிக் கொள்வ தைப் பற்றி நினைக்கவே இல்லை. 'போங்கோ, அம்மாஞ்சி!" என்று அவள் தன்னைப் பார்த்துச் சொல்லிய பிறகு, அவன் அவள் முகத்தை ஏறிட் டுப் பார்க்கக்கூட இல்லை. இப்பொழுதும் அவன் அவளைப் பார்க்கச் சிறிதும் விரும்பவில்லை. தட தடவென்று கூடத்தைத் தாண்டித் தாழ்வாரத் துக்கு வந்து விட்டான்.

"கோமளத்தினிடம் சொல்லிக் கொள்ளாமல் போகிறாயே!" என்று ஸ்ரீ காந்தன் அசந்தர்ப்ப மாக நினைவுபடுத்தியதும், கோவிந்தராஜனுக்குச் சுருக்கென்றது. சமையல் அறையைப் பார்த்துப் "போய்விட்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டு மறுபடியும் கிளம்பினான்.

ஆஹா! நான்கு நாட்களுக்கு முன் எவ்வளவு ஆனந்த மனக் கோட்டைகளுடன் அவன் வந் தான். அவன் இதயத்தை நிறைத்த அந்த மனக் கோட்டைகள் இன்று சிதறிச் சின்னாபின்னமாக அல்லவா ஆகிவிட்டன! ஸ்ரீகாந்தன்...! இவன் எங்கிருந்து வந்தான்! ஐயோ, கோமளம்! அவளைப்பற்றி நினைக்க நினைக்க கோவிந்து வின் மனம் சூனிய மாகி விட்டது போல் இருந்தது. என்ன தான் தேற்றிக் கொண்டாலும் அவன் மனம் கேட்கவில்லை. கோமளத்தையும் மறக்க முடியவில்லை.

5

ஊரிலிருந்து சீக்கிரம் திரும்பி விட்ட பிள்ளையின் முகத் தைப் பார்த்த உட னேயே "உன் உடம் புக்கு என்ன!" என்று கவலையுடன் கேட் டாள் அவன் அம்மா.

"என்னம்மா! எனக்கு ஒன்றும் இல்லையே!" என்றான் கோவிந்தராஜன்.

"அப்புறம் அத்தை, என்னடா சொன்னாள்! கோமளத்தை உனக்குக் கொடுப்பதைப் பற்றிப் பேச்சு ஏதாவது எடுத்தாளோ!" என்று அப்பா அவனைத் தனியாகக் கூப்பிட்டுக் கேட்டார்.

"இல்லை அப்பா. ஒரு வேளை ஸ்ரீகாந்தனுக்குக் கொடுக்க வேண்டும் என்று நினைவு இருக்கும் போலிருக்கிறது" என்றான் அவன். ஆனால் மறு கணம்தான் அதை அவரிடம் சொல்லி யிருக்கக் கூடாது என்று நினைத்து உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"சரி; சேந்த மங்கலத்திலிருந்து ரிடயர்ட் டிபுடி கலெக்டர் ஒருவர் உன் ஜாதகத்தை வாங்கிக் கொண்டு போய்ப் பார்த்து விட்டு, 'திருப்தியாக இருக்கிறது, பெண் பார்க்க வாருங்கள்' என்று கடிதாசி போட்டிருக்கிறார். என்ன பண்ணுகிறது!" என்று கேட்டார் தகப் பனார். அதற்கு அவன் வாய்திறந்து ஒன்றும் சட்டென்று பதில் சொல்லிவிடவில்லை. ஏமாந்த மடைந்திருந்த அவன் உள்ளத்துக்கு 'இப்பொழுது கல்யாணத்துக்கு என்ன அவசரம்!' என்றே தோன்றிற்று.

அதற்கப்புறம் பதினைந்து நாட்கள் ஓடிவிட்டன. சென்னைக்குப் பூமாவின் கல்யாண விஷயமாகப் போயிருந்த அத்திம்பேர் மோகனூருக்குத் திரும்பி வந்து விட்டதாகவும் பூமாவின் கல்யாணம் அந்த வருஷம் நடப்பது சந்தேகம் என்று கடிதம் வந்தது

அதற்குப் பிறகு ஐந்தாறு நாட்கள் ஆயின. ஒரு நாள் அத்தையிடமிருந்து வந்த கடிதத்தில் சென்னையிலிருந்து வந்ததிலிருந்து அத்திம்பேருக்கு உடம்பு சரியில்லை என்றும் மிகவும் கவலையாக இருக்கிறது என்றும் உடனே அண்ணாவும் மன்னி யும் கிளம்பி வந்தால் சௌகரியமா யிருக்கும் என்றும் எழுதி யிருந்தது.

அந்தக் கடிதத்தைப் பார்த்ததும் ரங்கநாத ஐயங்கார் கலவரம் அடைந்தார். ஆனால் அவரால் உடனே கிளம்ப முடியாதபடி வேறு அவசர வேலைகள் குறுக்கிட்டன. கோவிந்தராஜனின் அம்மாவுக்கும் புறப்பட முடியவில்லை. அதனால் கோவிந்தராஜனை மாத்திரம் உடனே அனுப்பினார்.

கோவிந்தராஜன் கோமளத்தைப் பற்றிய ஏமாற்றத்தை எல்லாம் மறந்து விட்டு அத்திம்பேருக்கு உடம்பு சரியில்லை என்றதும் பதறி அடித்துக் கொண்டு ஓடினான். வண்டியிலிருந்து இறங்கி உள்ளே போய் அத்திம்பேரைப் பார்த்து விட்டு "இவ்வளவுதானே, அத்தை! கொஞ்சங்கூடக் கவலைப்பட வேண்டியதில்லை. வழியிலே டாக்டர் ஒருவரைப் பார்த்துக் கேட்டேன். 'ஒன்றும் இல்லை; பட்டணத்துச் சீதோஷ்ணத்துக்கும் நம் ஊர் சீதோஷ்ணத்துக்கும் கொஞ்சம் மாறுதல் இருக்கிறதனால் கிராமத்திலிருந்து அங்கே போனால் ஜுரம் வருவதுண்டு என்றும் கவலைப்பட வேண்டியதில்லை என்றும் சொன்னார்" என்று அத்தைக்குத் தைரிய மூட்டினான்.

அன்று சாயங்காலம் அவனே வண்டியைக் கட்டிக் கொண்டு போய்ச் சன்னலூர் டாக்டரை அழைத்துக் கொண்டு வந்து காட்டினான். அவரும் "ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை" என்று சொல்லி விட்டார்.

கோவிந்தராஜன் மோஹனூருக்கு வந்து இரண்டு நாட்கள் ஆயின. ஆனால் அவன் கோமளத்தை ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை.

மூன்றாவது நாள் காலை அவன் கொல்லைப்புறத்து வழியாக உள்ளே வந்து கொண்டிருந்தான். அப்போது கோமளம் கிணற்றடியில் ஜலம் இழுத்துக் கொண்டிருந்தாள். அவன் அவளைப் பார்த்ததும் பார்க்காதவன்போல் உள்ளே நுழைவதற்கு முற்பட்டான்.

"அம்மாஞ்சி!"

கிணற்றடியில் நின்று கொண்டிருந்த கோமளத்தின் குரல் அவனைக் கூப்பிட்டது. மறு கணம் அவன் கால்கள் அவனை அறியாமல் அவள் இருந்த இடத்துக்கு அவனை இழுத்துச் சென்றன.

கோமளம் ஒரு கணம் அவனை ஏறிட்டு நோக்கினாள். அந்தப் பார்வை அவன் மனத்தில் ஒரு கலவரத்தையும் ஏற்படுத்தவில்லை. அவளைப் பார்த்து "ஏன், கோமளம்!" என்று கேட்டான். அவன் குரல் இருபது நாட்களுக்கு முன்பு நடுங்கியதுபோல் நடுங்கவில்லை.

"அம்மாஞ்சி...! நான் என்ன தப்புப் பண்ணி விட்டேன்! — என்னைப் பார்க்கக்கூடப் பிடிக்காத அளவுக்கு!" என்று கேட்டாள் கோமளம்.

கோவிந்தராஜன் திடுக்கிட்டு விழித்தான். கோமளத்தின் வாயிலிருந்து அந்தமாதிரிப் பேச்சை அவன் எதிர்பார்க்கவே இல்லை. அவன் இருதயம் அடித்துக் கொள்ள ஆரம்பித்தது.

"என்ன கோமளம்!"

"நீங்கள் இங்கே வந்து மூன்று நாட்கள் ஆகி விட்டன. அப்படி யிருந்தும் என்னுடன் முகம் கொடுத்துப் பேசவில்லை. நான் என்ன தப்புப் பண்ணி விட்டேன், அம்மாஞ்சி!" என்று பரிதாபமாகப் பார்த்தபடியே கேட்டாள்.

"இல்லை; நீ ஒரு தப்பும் பண்ணி விடவில்லை" என்றான் அவன்.

"பின் ஏன்......!" அவள் கண்களிலிருந்து வழிந்து கன்னங்களில் ஓடிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். "உங்களுக்கு அந்த டிப்டி கலெக்டரின் பெண்ணை நிச்சயம் ஆயிடுத்தா!" என்று கேட்டாள்.

கோவிந்தராஜன் திடுக்கிட்டான். அவன் தகப்பனார் அதைப் பற்றி அத்திம்பேருக்குத் தெரிவிக்கவில்லை. இவளுக்கு எப்படித் தெரிந்தது! "உனக்கு எப்படித் தெரியும்!" என்று கேட்டான்.

"தெரியாமல் இருக்குமா! நிச்சயம் ஆயிடுத்தா!" என்று கேட்டாள் கோமளம்.

திடீரென்று கோவிந்தராஜனின் மனத்தில் விஷமம் நிறைந்தது. "ஆமாம், நிச்சயம் ஆகிவிட்டது. அடுத்த மாசம் கல்யாணம் நடக்கும். ஆமாம், உனக்கும் ஸ்ரீகாந்தனுக்கும் எப்போது கல்யாணம்!" என்று கேட்டான்.

"அது நடக்கப் போகிறதில்லை!" என்று கூறினாள் கோமளம்.

"அடேடே, ஏன்!"

"எனக்குத் தெரியாது!" என்று சொல்லிவிட்டுக் கோமளம் தலையைக் குனிந்து கொண்டாள்.

"ஏன், ஸ்ரீகாந்தன் அழகாக இல்லையா! கெட்டிக் காரனாக இல்லையா!" என்று கேட்டான் கோவிந்தராஜன்.

"அவர் கெட்டிக்காரர்தான். ஆனால் எனக்கு இஷ்டமில்லையே! அம்மாவும் அப்பாவும் அவரைப் பற்றி எத்தனையோ சொல்லித் தூபம் போட்டார்கள். ஆயினும் என் மனம் மாறவில்லை. சென்னைக்குப் போய் அவனுடைய அம்மாவையும் தங்கையையும் பார்த்த பிறகு என் வெறுப்பு இன்னும் அதிகமாகத்தான் ஆயிற்று. பெண்களுக்கு இயல்பான கூச்சமும் வெட்கமும் அவர்களுக்குக் கொஞ்சமாவது இருக்க வேண்டுமே! நான் மஞ்சள் தேய்த்துக் குளிப்பதையும், எதற்கு எடுத்தாலும் வெட்கப்படுவதையும் பார்த்துப் பூமா, 'கோமளம் சுத்த 'கண்ட்ரியா' இருக்கிறாளே!' என்று பரிகசித்தாள். எனக்குக் கோபம் கோபமாக வந்தது. பெரிய அம்மாஞ்சியும் எல்லோருக்கும் முன்னிலையில் 'நீ ரொம்ப அழகாகத்தான் இருக்கிறாய், கோமளம். ஆனால் பிறரிடம் எப்படிப் பழகுகிறது என்றுதான் உனக்குத் தெரியவில்லை' என்று என்னை மட்டம் தட்டினார். அப்படிப் பட்டவரைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள எந்தப் பெண்ணுக்குத்தான் ஆசை ஏற்படும்! நீங்களே சொல்லுங்கள் அம்மாஞ்சி!

"கடைசியில் அவர் ஒருநாள் எங்களை எல்லாரையும் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டுப் போனார். அம்மா வராமல் நான் வரமாட்டேன் என்றேன். ஆனால் பூமாதான் என்னைக் கட்டிப் பிடித்து அழைத்துக் கொண்டு போனாள். அது என்ன சினிமா, தெரியுமா! ஏதோ இங்கிலீஷ் சினிமா! அம்மாஞ்சி, அதைப் பார்த்ததும் எனக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது.

"பெரிய அம்மாஞ்சி இங்கே வந்திருந்தபோது, சிரிக்கச் சிரிக்கப் பேசினார். அதைக் கேட்டு நான் சிரித்தேன். அதைக் கண்டு நீங்கள் மனம் குமைந்தீர்கள். அன்று காலை என் அபிப்பிராயத்தைக் கேட்டு அறிந்து கொள்வதற்காகக் கிணற்றடிக்கு வந்தீர்கள். என் மனத்தில் உள்ளதை வெட்கம் காரணமாகச் சொல்ல முடியாமல் நான், 'போங்கோ அம்மாஞ்சி!' என்றேன். அப்பொழுதும் என் மனம் உங்களைத்தான் நாடியது. இப்பொழுதும் உங்களைத்தான் நாடுகிறது. என்னைக் கைவிட மாட்டீர்களே! வெட்கத்தை விட்டுக் கேட்கிறேன்!" என்று கேட்டாள் கோமளம்.

"நிஜமாகவா!" என்றான் கோவிந்தராஜன்.

"போங்கோ, அம்மாஞ்சி!" என்று குறும்பும் வெட்கமும் தாண்டவமாடக் கூறி விட்டுக் குடத்தை 'ணக்' கென்று இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு ஒய்யார நடை நடந்து உள்ளே சென்றாள் கோமளம்.

# இதுதான்
# உண்மையான
# இடைச்சி மார்க்

## பாலின்
## சின்னம்




மிகச் சிறந்த பொருள்களை வாங்குவதில் லாபம் இருக்கிறது என்பதை நாம் வாழ்க்கையில் காண்கிறோம். சிறந்த பொருள்களை வாங்குவது பணத்தைச் சிறந்த முறையில் செலவழிப்பதாகும் என்பதை, நம் முன்னோர்கள் அறிந்தது போலவே நாமும் தெரிந்து கொண்டிருக்கிறோம். அதனால்தான் **இடைச்சி மார்க் பாலை** இந்தியர்கள் பல வருடங்களாக விரும்பி வந்திருக்கிறார்கள், அது மக்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்கிறது — அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாவதற்காக அது சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டது.

**பணத்தின் மதிப்பை உணர்ந்து**
**விவேகமுடன் உபயோகியுங்கள்**
**நல்ல பொருளை வாங்குங்கள்**

விவரங்களுக்கு:

## நெஸில்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிட்.

தபால் பெட்டி 180, மதராஸ் 1-க்கு எழுதுங்கள்






ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழி பெயர்ப்பு : ரா. வீ.

## பூர்வ கதை

நல்லதசையில் இருந்து நாலு பேருக்கு உபகாரியாக வாழ்ந்தவர் ராமலால். கணவனுக்கேற்ற மனைவியாக வாய்த்தாள் சுபத்திரா. அந்த ஊரில் அவனுடைய உதவியை நாடாத வீடுகளே கிடையாது. காலத்தின் சுற்று, நல்ல தசையிலிருந்த அந்தக் குடும்பம் நொடித்து விடுகிறது. அவர்களுக்கு ஆசைக்கு ஒரே பெண்ணாக மனோரமா பிறக்கிறாள்.

ராமலாலுக்குப் பரம நண்பர் பரமானந்தர் என்பவர். அநேக ஆண்டுகளுக்குப் பின் அவர் ராமலாலைச் சந்திக்க வருகிறார். வறுமை நிலையில் இருந்த ராமலால் ஒரு சிறு வீட்டில் குடியேறி விடவே, வீட்டை விசாரித்துக் கொண்டு பரமானந்தர் வர நேரிடுகிறது. ராமலாலின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் குடியிருக்கும் கல்லூரி மாணவன் சுதாகர் என்பவன் அவருக்கு வீட்டை அடையாளம் காட்டுகிறான். பரமானந்தர் காரணமாகச் சுதாகருக்கு ராமலாலின் குடும்பத்தோடு நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிட்டுகிறது. மண வயதை நெருங்கி விட்ட மனோரமாவுடன் பழகும் பாக்கியமும் கிட்டுகிறது. மனோரமா அவனைப் பார்த்ததுமே, மனத்தை அவனிடம் பறிகொடுத்து விடுகிறாள்.

நாலு காசு சம்பாதித்ததும் கடிதம் எழுதுவதாக மனோரமாவுக்கு வாக்களித்து விட்டுச் சுதாகர் வேலையை நாடி பம்பாய்க்குச் செல்கிறான். ஒரு நாள் தற்செயலாக அவன் வழியில் பரமானந்தரைச் சந்திக்கிறான். அவருடன் சென்ற அவன் ரஹ்மத் என்பவனின் கத்திக் குத்துக்கு இலக்காகி அவர் விடுதியில் தங்கும்படி நேரிடுகிறது.

ராமலால் சிரம திசையில் சிக்கிக் கொண்ட காலத்தில் மாதவப் பிரஸாத் என்னும் தனவந்தர் நியாய விலைக்கு அவருடைய வீடு வாசலையும் நிலபுலன்களையும் வாங்கிக் கொண்டு அவருக்குக் கை கொடுத்து உதவுகிறார். அவருக்கு முதல் மனைவி நோய் வாய்ப்பட்டு அகாலத்தில் இறந்து விடுகிறாள்.

ராமலாலுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிட்டியதன் பலனாக, மனோரமாவின் மீது அவர் நாட்டம் செல்கிறது.

மனோரமாவின் மனத்தில் எப்படியாவது இடம்பெற வேண்டும் என்று எண்ணிய மாதவப் பிரஸாதுக்கு மீண்டும் வாலிபம் திரும்புகிறது. அழகாக ஆடையலங்காரம் செய்து கொண்டு குதிரை மீது ஏறி மனோரமாவின் வீட்டு வாசலை அடைகிறார். அப்பொழுது குதிரை மீதிருந்து கீழே விழுந்து காயம் பட்டுக் கொள்கிறார். மனோரமாவுக்கு அவரிடம் அப்பொழுது அநுதாபம் உண்டாகிறதே ஒழிய, அன்பு உண்டாகவில்லை.

இம்மாதிரிச் சந்தர்ப்பத்தில்தான் பம்பாய்க்குச் சென்ற சுதாகர் கெட்ட சகவாசத்தில் ஈடுபட்டுவிட்டான் என்னும் செய்தி தோழி மூலம் அவளுக்குக் கிட்டுகிறது.

எனவே, மனோரமா மனம் இல்லாமலிருந்த பொழுதிலும் மாதவப் பிரஸாதைக் கட்டாயமாகக் கல்யாணம் செய்து கொள்ளும்படியாகிறது. இனி மேலே படிக்கலாம்.

## 19. அதிர்ஷ்டத்தின் அறிகுறி

லட்சாதிபதியாக ஆக வேண்டும், அந்தப் பணத்தைக் கொண்டு வந்து மனோரமாவின் மலரடிகளில் கொட்ட வேண்டும், அப்புறம் அவளைத் தன் இருதயத்து ராணியாக ஏற்று இன்ப வாழ்வு வாழ வேண்டும் என்று மனக்கோட்டை கட்டிக் கொண்டு பம்பாய்க்குப் போன சுதாகர் வாழ்க்கையில் வழி தவறி நடந்த பெண்களுக்காக நிறுவப்பட்ட .

ஆசிரமத்தில் போய்த் தங்கப் போகிறான் என்று யாராவது எண்ணிப் பார்த்திருப்பார்களா? தனது கல்வியறிவில் கர்வம் கொண்ட சுதாகர் அந்த நாளில் மனத்தில் என்னவெல்லாம் கற்பனை கட்டிக் கொண்டிருந்தான்? 'நமது அறிவையும் மூளையும் உலகத்துக்கு வழங்க வேண்டும். நமது மேதையை உபயோகப் படுத்திக் கொள்ள இந்த உலகம் வெகு ஆர்வத்துடன் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது. கல்லூரிக் கல்வி முடிந்ததும் கோலாகலத்துடன் வரவேற்று நம்மைக் கௌரவிக்கப் போகிறது. நாம் அறிவின் ஒளிச்சுடராக, லக்ஷ்மிதேவியின் கருணைக்கண் பார்வைக்கு இலக்கானவனாக வாழப் போகிறோம்' என்றெல்லாம் மனத்துள் கோட்டை கட்டி மகிழ்ந்து கொண்டிருந்தான். ஆனால் அத்தனை ஆசையையும் கட்டிக் கொண்டு பம்பாய் சென்ற அவனை நிராசைதான் நேர் கொண்டழைத்தது. உலகம் அவனுடைய அறிவையும் மூளையையும் பயன்படுத்திக் கொண்டு வாழ வேண்டும் என்று கவலைப் படுவதாகவே தெரியவில்லை. எப்பொழுதும் போல் எதையும் லட்சியம் செய்யாமல் சித்தம் போக்கு சிவன் போக்கு என்று தன் போக்கிலேயே முன்னேறிக் கொண்டிருந்தது.

பம்பாயை அடைந்தபின்தான் சுதாகருக்கு, 'நம்மைப் போல் கல்வி கேள்விகளில், அறிவுத் திறனில் அசகாய சூரர்களாக எத்தனையோ பேர் இருக்கிறார்கள். மலை விழுங்கி மகாதேவர்களாக, நம்மைக் காட்டிலும் சாதுர்யவான்களாக எத்தனையோ பேர் இருக்கிறார்கள். படித்தவர்கள் குறைவாயில்லை; பெருவாரியாகவே இருக்கிறார்கள். படித்துப் பாவி வயிற்றை நிரப்ப வழி தெரியாமல் தான் திண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்' என்பதெல்லாம் அநுபவ வாயிலாகத் தெரிய வந்தது! மனோரமாவுக்காக லட்சாதிபதியாகியே தீர்வது என்று கனவு கண்டு கொண்டிருந்த சுதாகர், ஊனத் தொழில் செய்யும் மூஸல்மானின் கத்திக் குத்துக்கு இலக்காகி, சிற்றின்ப போகங்களில் ஊறித் திளைக்கும் ஆண் பெண்கள் வாழும் தெருவிலே, தான் தங்கி வாழவேண்டியிருக்கும் என்று மனத்தினால் எப்பொழுதாவது ஸ்மரித்தாவது பார்த்திருப்பானா? எனவே, அறிவுக்கும் அப்பாற்பட்ட ஏதோ ஒரு வஸ்து இருக்க வேண்டும் என்பதாக அவனுக்குத் தோன்றத் தொடங்கியது. அறிவுக்கும் அப்பாற்பட்ட வஸ்து என்று ஒன்று இல்லாவிட்டால் அவன் நினைத்த கருமம் நினைத்தபடி நடந்திராதா?



மனோரமா அடிக்கடி அவன் நினைவுத் திரையில் இடம் பெறத் தொடங்கினான். குயிலியின் பாட்டைக் கேட்கும்பொழுது அவனுக்கு மனோரமாவின் குரல்தான் நினைவு வந்தது. அவனே குருட்டுக் குயிலியிடம் பாடக் கற்றுக் கொண்டிருந்தான். நாளடைவில் அவனுக்குச் சங்கீதத்தில் உண்மையாகவே ஒரு வித ஆனந்தம் இருக்கிறது என்பது புலனாகியது. புலனாகியது மட்டும் அல்ல; அவன் அதை வெகு இன்பமாக அநுபவிக்கவும் கற்றுக் கொண்டு விட்டான். அவனுக்கு ஸ்வர நுணுக்கம், ராக ஞானம், லயசுத்தம் அவற்றினால் உண்டாகும் ஆனந்தம் ஆகியவையெல்லாம் மிக நன்றாக விளங்கத் தொடங்கி விட்டன.

அவன் காயம் அங்கிருந்த அந்நாட்களில் கிட்டத் தட்ட ஆறியும் வரத் தொடங்கி விட்டது. அன்றொரு நாள் அவன் குயிலியிடம்

அஸாவரி ராகத்தின் ஸ்வரப் பிரஸ்தாரங்களைக் கற்றுக் கொண்டு, தனிமையில் உட்கார்ந்து அப்பியாஸம் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது திடீரென்று பரமானந்தர் அங்கே வந்து சேர்ந்தார். அவர் வந்ததும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். பிறகு தமக்கு இயல்பான மகிழ்ச்சி முத்திரையை முகத்தில் வரவழைத்துக் கொண்டு சுதாகரின் அருகில் போய் உட்கார்ந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் ஆனந்த பரவசமுற்றுத் தம்மையும் அறியாமல் அவன் தோள் பட்டை மீது இலேசாகக் கையை வைத்தார்.

சுதாகர் மெய்ம்மறந்து பாடிக் கொண்டிருந்தான். அவனுக்குப் பரமானந்தர் தம் அறைக்கு வந்தது, பெரு மூச்சு விட்டது ஒன்றும் தெரியாது. அவர் தோள்மீது கை வைக்கவே சட்டென்று திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பாட்டையும் நிறுத்தி விட்டான். பரமானந்தரின் முகத்தில் புன்னகை படர்ந்தது. அவன் அதிசயமும் ஆச்சரியமும் ஒருங்கே கூட அவரைப் பார்த்தான்.

"ஏன் நிறுத்தி விட்டாய்? அஸாவரியில் அபிவீனியா வெற்றியைக் காட்டிலும் ஆனந்தமும் இன்பமும் இருக்கின்றன என்பது இப்பொழுதாவது உனக்குப் புரிந்ததா, இல்லையா? மால்கோஷ் அழகானதா? பூகோள சித்தாந்தங்கள் அழகானவையா? இப்பொழுது உனக்கு எப்படித் தோன்றுகிறது? சொல்!" என்று பரமானந்தர் தமக்கே இயல்பான விசித்திர முறையில் அவனிடம் கேள்வியைக் கேட்டு வைத்தார்.

"வாதத்துக்கே இடம் இல்லாத விஷயங்களிலும் கூட நீங்கள் விவாதம் செய்து விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பீர்கள் போலிருக்கிறதே!" என்று அவருக்குப் பதில் அளித்தான் சுதாகர்.

சுதாகர் பாட்டுக் கற்றுக் கொள்ளத் தொடங்கியிருந்தான் என்பது உண்மைதான். ஆயினும் சங்கீதத்துக்கு அடிமையாகவோ பக்தனாகவோ அவன் இன்னும் ஆகி விடவில்லை. அரசியல் பூகோளம் ஆகியவற்றுடன் சங்கீதத்தை ஒப்பிட்டுச் சங்கீதம் தான் உயர்த்தி என்று சொல்லவோ மட்டம் என்று சொல்லவோ கூடிய அளவுக்கு அவனுடைய சங்கீதப் பைத்தியம் முற்றி விடவில்லை. அததற்குள்ள ஸ்தானம் அததற்கு உண்டு என்ற எண்ணம்தான் அவன் உள்ளத்தில் அப்பொழுதும் வலுப் பெற்றிருந்தது.

"நான் வாதம் செய்கிறேன் என்று நீ எப்படிச் சொல்ல முடியும்? நான் ஒரு விஷயத்தைச் சொன்னால், அது வாதமாகி விடுமா? நீதான் அதை வீணில் வாதம் என்று எண்ணுகிறாய். நான் உன்னிடம் ஒன்று கேட்கிறேன், சொல்லு. கடவுள் உன்னிடம் வந்து, 'மோஹனி ராகம் வேண்டுமா? தர்க்க சாஸ்திரம் வேண்டுமா? இரண்டும் கிடைக்காது. இரண்டில் ஏதாவது ஒன்றுதான் கிடைக்கும்' என்று சொல்கிறார் என்று வைத்துக் கொள். நீ எதைத் தேர்ந்தெடுப்பாய்? மோஹனி ராகத்தையா, தர்க்க சாஸ்திரத்தையா?" என்று கேட்டார் பரமானந்தர்.

சுதாகர் அவருடைய அந்த விசித்திரமான கேள்வியைக் கேட்டுச் சிரித்தான். பிறகு, "எனக்குத் தர்க்க சாஸ்திரம் வேண்டாம். மோஹனி ராகம்தான் வேண்டும் என்று சொல்லிவிடுவேன்" என்று பதிலளித்தான்.

பரமானந்தர் அதைக் கேட்டதும் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்து, "சபாஷ்! அப்படிச் சொல்லு! நீ உலகத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளக் கூடியவன்தான். உங்கள் பள்ளிப் படிப்பும் கல்லூரிக் கல்வியும் சங்கீதம் இல்லாததால் எவ்வளவு வறட்சியானவையாயிருக்கின்றன? உயிர் உணர்ச்சி அற்றவையாயிருக்கின்றன? இதை இப்பொழுதாவது புரிந்து கொண்டாயா?" என்றார்.

தற்காலத்திய படிப்பில் உள்ள இசைக் குறையை ஒப்புக் கொள்ளாமல் வேறு வழி தோன்றவில்லை. இசையோடு இயைந்த புலமை முக்கியம் தான் என்று தோன்றியது.



"சரி, அதுபோகட்டும். இனி நீ செயற் களத்தில் இறங்க வேண்டும். உனக்கு ஏராளமான பணம் - காசு, சொத்து சுதந்திரம் வேண்டும் அல்லவா?" என்று கேட்டார் பரமானந்தர்.

"ஆமாம். இந்தச் சமயம் எனக்குப் பெரிய பணக்காரனாக ஆக வேண்டும் என்றுதான் ஆசை" என்றான் சுதாகர்.

"உன் ஆசை நிறைவேறக் கூடிய வழி ஒன்றை நான் கண்டு பிடித்திருக்கிறேன். இந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு, நீ கடற்கரையில் உள்ள பங்களாவுக்குப் போ. உன் அறிவு, சங்கீதம் இரண்டிலும் முழு நம்பிக்கை வை. வியக்கத் தக்க முறையில் சிறிது காலத்துக்குள்ளேயே நீ லட்சக் கணக்காக ரூபாய்களைக் குவித்துக்கொட்ட முடியும்." என்றார் பரமானந்தர். குருடன் விரும்புவது என்ன? இரண்டு கண்கள் தானே? சுதாகர் 'சரி' என்று தலை யசைத்தான்.

பரமானந்தர் பங்களாவின் விலாசத்தைக் கொடுத்து

ஒரு கடிதமும் எழுதிக் கொடுத்தார். அது மட்டும் அல்ல, ஒரு குட்டி உபதேசமும் செய்தார்.

"சுதாகர்! நீ ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். அதுவும் பெண்களிடம் சர்வ ஜாக்கிரதையாகப் பழக வேண்டும். பெண்களினால் உலகத்தில் பெரிய பெரிய பிரயோஜனங்கள் ஏற்பட முடியும். பெண்ணால் ஆகாத காரியம் ஒன்றும் இல்லை என்று கூடச் சொல்வது உண்டு. அதே போலப் பெண்ணிடம் நெருங்கிய தொடர்பு அதிகரிக்க அதிகரிக்கத் தீமைகளும் ஏற்படக் கூடும். தீமைகள் என்றால் இப்படி அப்படிப் பட்ட சாதாரணத் தீமைகள் இல்லை. ஆளையே அடியோடு கவிழ்த்து இருந்த இடமே தெரியாமல் அடித்து விடும். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். இனி ஜாக்கிரதையாகப் பழகி நல்ல பெயர் எடுக்க வேண்டியது உன் பொறுப்பு!" என்றார்.

சுதாகர் 'சரி' என்று தலையாட்டினான். பிறகு அகத்திலும் முகத்திலும் மகிழ்ச்சி பொங்கப் பரமானந்தர் சொன்ன பங்களாவை நோக்கிப் புறப்பட்டான்.

* * *

பங்களாவைப் பார்த்த மாத்திரத்திலேயே பிரமித்து விட்டான் சுதாகர். அப்பப்பா! எத்தனை பெரிய பங்களா! என்ன வேலைப்பாடு! இத்தனை பெரிய பணக்காரருடன் பரமானந்தருக்குச் சிநேகிதம் எப்படிக் கிட்டியது? பார்ப்பதற்குப் பரதேசியைப் போலிருக்கும் பரமானந்தர் இத்தனை பெரிய மனுஷ்யரா? பெரிய பெரிய பணக்காரர்கள் எல்லோரும் அவர் கைக்குள்ளா? 'பரமானந்தர் விசித்திரமான மனிதர்தான். அவருடன் பழகியதிலிருந்தே தெரியவில்லையா? அவருடைய அவ்வளவு விசித்திரங்களிலும் இதுவும் ஒன்றாக இருக்க வேண்டும்!' என்று கேள்விகளுக்கு மேல் கேள்விகள் கேட்டுக் கொண்டு சந்தேகத்தில் உழன்று கொண்டிருந்த தன்னுடைய மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

பங்களாவுக்குள் நுழைந்து அவன் பரமானந்தர் கொடுத்த கடிதத்தை உள்ளே அனுப்பி வைத்தான். கடிதத்தை அனுப்பி வைத்த சில நிமிஷங்களுக்குள்ளாகவே பலன் தெரிந்தது. உடனே அவனுக்கு உள்ளே வருமாறு உத்தரவு வந்து விட்டது. சுதாகர் கல்லூரிப் படிப்பு படித்தவனாயிற்றே! அவனுக்கு நாகரிகம் சொல்லிக் கொடுக்க வேண்டுமா? அவன் வெகு நாசுக்காக அறைக்குள் நுழைந்தான்.

உள்ளே சென்று வீட்டுக்குச் சொந்தக்காரரைப் பார்த்த சுதாகருக்குப் பணத்துடன் பார்க்க முடியாத கோர ஸ்வரூபமே கிடைக்கும் என்றால் அந்தப் பணம் தனக்கு வேண்டாம் என்றே தோன்றிற்று. பணக்காரனாயிருப்பவன் பார்ப்பதற்குப் பகட்டானவனாக அழகானவனாக இருக்கக் கூடாது? இப்படிக் கோரமாக, பயங்கரமாகவா இருக்க வேண்டும்? பணத்துக்கும் பயங்கர ரூபத்துக்கும் என்ன சம்பந்தம்? பணம் வேண்டுபவனுக்குப் பார்க்கப் பிடிக்காத ரூபம்தான் கிடைக்கும் என்பது நிபந்தனையாயிருந்தால் அந்த நிபந்தனைக்கு அவன் அடி பணியத் தயாராயில்லை. தனக்குப் பணமே வேண்டாம். பணம் இல்லாவிட்டாலும் பத்துப் பேர் பார்ப்பதற்கு அழகாயிருந்தாலே போதும் என்றே எண்ணினான்.

"உம்மைப் பரமானந்தர் அனுப்பினாரா?" என்று கேட்டார் வீட்டு முதலாளி.

"ஆமாம்!"

"நீர் பட்டதாரியா?"

அந்தக் கேள்வியில் தொனித்த செருக்கு சுதாகருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. செல்வத்துக்கும் செருக்குக்கும் இவ்வளவு நெருங்கிய தொடர்பா? அவன் வெகு அசுவாரஸ்யமாக, "ஆமாம்!" என்று சுருக்கமாகவே பதில் சொன்னான்.

வீட்டுக்குச் சொந்தக்காரர் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர் அல்ல. ஆனால் அவரிடம் உத்தியோகம் வேண்டி எத்தனையோ பட்டதாரிகள் வந்து போனவண்ணமாய் இருந்தனர். பட்டதாரிகளைத் தம் பாதத்தில் பணிய வைக்கக் கூடிய அபார சக்தி தமக்கு இருக்கிறது என்பதை அவரால் சிறிதேனும் மறக்க முடியவில்லை. அந்தச் சக்தியின் நினைவே அவருக்கு அலாதியான மண்டைக் கர்வத்தை அளித்திருந்தது.

சேட் ஜ்வாலாப் பிரஸாத் அபாரமான ஐசுவரிய சம்பத்துக்கு எஜமானர். அவருடைய தாத்தா கிராமத்திலிருந்து உத்தியோகம் வேண்டி நகரத்தை அடைந்தவர். ஒரு சாதாரணக் கடையில் குமாஸ்தா உத்தியோகம் பார்த்துத் தமது நாணயத்தினாலும் உழைப்பினாலும் முன்னுக்கு வந்தவர். மதிப்பும் மரியாதையும் பெற்றவர். ஜ்வாலாப் பிரஸாதின் தந்தையும், தமது தந்தையின் அடிகளைப் பின் பற்றிப் பணமும் பெயரும் பெற்றவர். அப்பாவுக்குப் பிள்ளையாக. அவருடைய காலத்தில் எதிர்பார்த்ததற்கு எதிராக ஏராளமான சொத்து சேர்ந்தது. வீடு வாசல், கிராமத்தில் நிலபுலன்கள் இப்படியாக அவர் சொத்து வளர்ந்தது. அது மட்டுமா? நான்கு மில்கள் அவருக்குச் சொந்தமாயின. இரவு பகல் எந்நேரமும் வேலை செய்தன. பணத்தைக் கொண்டு வந்து கொழித்துக் கொட்டின. ஆண்டுகள் தோறும் லக்ஷ்மிதேவி பணமாரியாகப் பெய்யத் தொடங்கவே, சொத்து கணக்கில் அடங்காமல் பெருகிவிட்டது. கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிரித்துக் கொண்டு வந்து கொடுக்கும் என்று தெரியாமலா பெரியவர்கள் சொன்னார்கள்!

ஜ்வாலாப் பிரஸாதின் தந்தையை சேட்டுகள் வியாபாரிகள் எல்லோரும் மிகவும் மதித்தனர். அவருக்கு எல்லோரிடமும் அபாரமான வாகினி உண்டு. அவர் விரல்

அசைத்தால் போதும், ஆகாத காரியம் என்று ஒன்றும் இல்லை. அப்படிச் செல்வாக்குப் பெற்று விட்டார் அவர். அவ்வளவிருந்தும் ஆண்டவன் அவரிடத்தில் ஒரு குறைபாட்டை வைத்து விட்டான். அந்தக் குறை அவரைச் சதா சர்வகாலமும் உறுத்திக் கொண்டிருந்தது. அதன் காரணமாக அவருக்கு ஒரு கை ஒடிந்தது போன்ற உணர்ச்சியே இருந்து வந்தது. வியாபாரிகளும், தொழிலாளிகளும் அவரிடம் அபாரமான மதிப்பு வைத்திருந்த பொழுதிலும், சர்க்கார் அதிகாரிகளும் பெரிய பதவியில் உள்ளவர்களும் அவருக்கு அவ்வளவாகப் 'பிராமினன்ஸ்' அதாவது மதிப்புக் கொடுக்கவில்லை. தமக்கு இருந்த செல்வாக்குக்கும் சொத்துக்கும் தகுந்த மதிப்பு, தமக்கு அதிகாரிகளிடத்தில் கிட்டவில்லையே என்பது அவருக்கு ஒரு தீராக் குறையாகத்தான் இருந்து வந்தது.

கவர்னர் முதலிய பிரமுகர்களுக்கு அளிக்கப்படும் விருந்துகளுக்கும் பாராட்டுக் கூட்டங்களுக்கும் அவருக்கு அழைப்பு வரும். ஆனால் ஆங்கிலம் படித்த அதிகாரிகளுக்கு, கௌன்சிலர்களுக்கு, பாரிஸ்டர்களுக்குக் கிடைக்கும் அந்த மரியாதையும் மட்டும் அவருக்குக் கிடைப்பதில்லை. அவர்களுக்கெல்லாம் அவர் அடங்கித்தான் போக வேண்டியதாயிருந்தது. ஆனால் ஏதாவது மன்றத்துக்கோ சங்கத்துக்கோ நன்கொடையாக நிறையப் பணம் வாங்க வேண்டும் என்றநிலை ஏற்பட்டு விட்டால் எந்தப் பெரிய பெரிய அதிகாரியும் அவர் வீட்டுப் படியேறி வந்து, அவரைப் பாராமல் இருந்ததில்லை. சிரித்துச் சிரித்துப் பேசி இன்சொல் ஆடி அவரிடமிருந்து, தான் உத்தேசித்த தொகையைப் பெறாமல் சென்றதில்லை. அதிகாரி பணம் பிடுங்கிக் கொண்டு போய் விட்டாரே என்று அவருக்கு லவலேசம் கூடத் துயரம் உண்டானதில்லை. ஆனால் ஏதாவது விருந்துக்குப் போயிருக்கும் பொழுது அதே அதிகாரி வந்துவிட்டால், அவருக்கு ராஜோபசாரம் நடக்கும். முதல் வரிசையில் உட்கார்ந்திருக்கும் ஜ்வாலாப் பிரஸாதின் தந்தைக்குத் தம் ஆசனத்தை ஒழித்துக் கொடுத்து விட்டு ஒதுப்புறமாகப் போய் உட்கார வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். அப்பொழுது அவருக்குப் பற்றிக் கொண்டு வரும் ஆத்திரத்தைப் பார்க்க வேண்டுமே! ஆனால் அவருடைய அந்த ஆத்திரம் யாரை என்ன செய்துவிட முடியும்?

பெரிய பெரிய அதிகாரிகளைக்கூட, அவர்கள் வாங்கும் சம்பளத்தைக் காட்டிலும் இரண்டு மூன்று மடங்கு அதிகமாகக் கொடுத்துத் தம்மிடம் வேலைக்கு வைத்துக் கொள்ளக் கூடிய அளவுக்கு அவரிடம் ஏராளமான பொருள் இருந்தது. எத்தனை பொருள் இருந்து என்ன? தம் அந்தஸ்துக்குள்ள மதிப்பு அதிகாரிகளிடையே கிடைக்காத குறை பெரிய குறையாகத்தான் இருந்தது! (தொடரும்)

# முத்து வளை

பிருந்தா

அன்று வெள்ளிக் கிழமை. மாலை ஆறு மணி இருக்கும். பூஜையறையில் விளக்கேற்றி வைத்து ஸ்வாமி படத்துக்கு நமஸ்காரம் செய்து விட்டு வாசற்புறம் வந்தேன். சாதாரணமாக ஐந்து மணிக்கே வீடு திரும்பும் கணவர் ஆறரை மணியாகியும் வராததால் கவலையுடன் அவர் வரும் வழியைப் பார்த்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரத்தில் அவர் வந்து விட்டார். இருவருமாக உள்ளே சென்றோம். அவர் ஆபீஸ் உடைகளைக் களைந்து வேற்றுடை அணிந்து கொண்டு வருவதற்குள் நான் மௌனமாக அவர் கைகால் அலம்ப ஜலம் வைத்து விட்டுக் காப்பி எடுத்துவரச் சமையலறைக்குச் சென்றேன். நான் காப்பியை எடுத்துக் கொண்டு அவர் அறைக்குச் செல்லுமுன் அவரே சமையலறைக்கு வந்து விட்டார். அங்கேயே அவருக்குக் காப்பியும் டிபனும் கொடுத்தேன்.

தினமும் அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சளசளவென்று பேசும் நான் அன்று வழக்கத்திற்கு மாறாக மௌனமாக இருப்பதைக் கண்டு, "என்ன வஸந்தி, ஏன் ஒரு மாதிரியா இருக்கே? ஆபீஸிலிருந்து லேட்டாக வந்தேன் என்று கோபமா? என்ன செய்வது! வழியில் என் பால்ய நண்பன் ஒருவன் பிடித்துக் கொண்டு சளசளவென்று பேச ஆரம்பித்து விட்டான். அவனிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு வருவதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது. இந்தச் சிநேகிதர்களே இப்படித்தான். சமயத்திலே வந்து கழுத்தறுக்கின்றார்கள். வீட்டுக்கு வாடா என்றால் வராமல் என்னையும் விடாமல் காரின் கதவைப் பிடித்துக் கொண்டு ஒரு மணி நேரமாகத் தன் பிரதாபங்களைப் பற்றிப் பிரசங்கம் செய்து விட்டான்" என்று அலுத்துக் கொண்டார்.

"எனக்குக் கோபம் ஒன்றுமில்லையே. ஆமாம்; நாழியாகிறது; இன்று வெள்ளிக் கிழமை, கபாலி கோவிலுக்குப் போக வேண்டாமா?" என்று பேச்சை மாற்றினேன்.

"ஆமாம், நான் மறந்தே போயிட்டேனே! ஆபீஸிலிருந்து வரும்போது மல்லிகைப் பூ வாங்கினேன். பையிலிருக்கிறது, கொண்டு வருகிறேன்" என்று எழுந்தார்.

"இப்போ என்ன அவசரம். நான் பையிலிருந்து எடுத்துக் கொள்கிறேன். நீங்கள் காப்பியைக் குடியுங்கள்" என்றேன். நான் சொன்னதற்காகக் காப்பியை அவசர அவசரமாகக் குடித்து விட்டு எழுந்து சென்றார்.

நான் தட்டு, டம்ளர்களை அலம்பி வைத்து விட்டு, அறையின் விளக்கை அணைத்து விட்டு வெளியே வர இருந்தேன். அதற்குள் என் தோளில் யாருடைய கையோ பட்டது. நான் திடுக்கிட்டுப் போய் ஸ்விச்சைப் போட்டேன். அவர்தான் நின்று கொண்டிருந்தார்.

"அப்பாடா! நீங்கள்தானா! நான் பயந்தே போய் விட்டேன். இப்படித்தான் நீங்கள் செய்வதாக்கும்!" என்று போலிக் கோபத்துடன் சிணுங்கினேன்.

"அப்பப்பா! பயப்படுகிற ஆளைப் பாரு!" என்று கன்னத்தில் மெதுவாகத் தட்டி விட்டு "எங்கே கொஞ்சம் திரும்பு, பார்க்கலாம். பூவை நானே கட்டி விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கட்டி விட்டு "சரி, கிளம்பலாமா கோவிலுக்கு?" என்றார்.

"இருங்கள், வேறு புடவை மாற்றிக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி என் அறைக்குள் புகுந்தேன். பெட்டியின் மேலாக இருந்த கறுப்புக் கரை போட்ட வெண்பட்டுப் புடவையையும், அதற்குத் தகுந்தாற்போல் கறுப்பு ஸாடின் சோளி ரவிக்கையையும் எடுத்து அணிந்து கொண்டேன். இடது கையில் கடிகாரத்தையும், கழுத்தில் முத்து நெக்லேஸையும் அணிந்து கொண்டு, அருகிலிருந்த கண்ணாடியில் பார்த்துக்கொண்டேன். பட்டுப் புடவை, வாட்ச், நெக்லேஸ் என்று எல்லா அலங்காரங்களும் முடிந்தும் கூட, ஏதோ குறை இருப்பதாக எனக்குப் பட்டது. சட்டென்று ஞாபகம் வந்தது. பெட்டியைத் திறந்தேன். அதிலிருந்த ஒரு ஜதை நல் முத்து வளைகள் மின்சார வெளிச்சத்தில் பளீரென்று ஒளி விட்டு மின்னியது. அதைப் பார்த்தவுடன் ஏனோ என் மனத்திலும் மின்னல் மின்னுவதைப் போல் பழைய சம்பவங்கள் தோன்ற ஆரம்பித்தன. நான் அப்படியே பெட்டியருகில் உட்கார்ந்து விட்டேன்.

என் தகப்பனார் சென்னையில் ரயில்வேயில் பெரிய பதவி வகித்தார். என் பெற்றோருக்கு நானும், மணியும் இரண்டே குழந்தைகள்; மணி என்னைவிட எட்டு வயது மூத்தவன். நான் சிறியவளாதலால் எனக்கு வீட்டில் பல விசேஷ சலுகைகள் கொடுக்கப்பட்டிருந்தன. யாவரும் என்னிடம் பிரியமாயிருந்தனர். அதிலும் மணிக்கு என்னிடம் ஓர் அலாதிப் பிரியம். எப்போதும், வஸந்திக்கு அது பிடிக்கும்; இது பிடிக்கும் என்று பலவிதப் பொருள்களை வாங்கித் தந்து கொண்டே இருப்பான். நானும் 'அண்ணா, அண்ணா' என்று அவனையே சுற்றி வருவேன். இப்படியாக எங்கள் நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

அப்போது நான் 5-ம் பாரம் படித்துக் கொண்டிருந்தேன்; மணி எம். எஸ்ஸி. 2-ம் வருஷம் காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். திடீரென்று ஒரு நாள் டில்லியிலிருந்த

என் சித்தப்பாவிட மிருந்து, "பாட்டிக்கு உடம்பு அதிகமாக இருக்கிறது. உடனே யாவரும் புறப்பட்டு வரவும்" என்று தந்தி வந்தது. மறு நாள் காலையில் நாங்கள் டில்லிக்குப் புறப்பட்டுப் போனோம்.

டில்லியில் என் ஒரே அத்தையான ஜானகியும் தன் பெண் புவனாவுடன் கான்பூரிலிருந்து வந்திருந்தாள். பாட்டிக்கு உடம்பு அதிகமாகத்தான் இருந்தது. எல்லோருக்கும் மிக வருத்தமாக இருந்தது. டாக்டர் சொன்னதே போல் அன்று மாலை பாட்டியின் ஆவி பிரிந்து விட்டது. அந்திமக் கிரியைகள் எல்லாம் கிரமப்படி நடந்தன.

நாட்கள் தாம் எவ்வளவு வேகமாக ஓடுகின்றன! அன்று பாட்டி இறந்து இருபத்தைந்து நாட்கள் ஆகிவிட்டன. அப்பாவுக்கு லீவு முடிந்து விட்டதால் அன்று நாங்கள் சென்னைக்குப் புறப்பட இருந்தோம். அன்றே அத்தையும் தன் ஊருக்குக் கிளம்பலானாள். தாத்தா, பாட்டியின் நகைப் பெட்டியைக் கொண்டு வந்து மேஜை மேல் வைத்து, அத்தையைக் கூப்பிட்டு, "அம்மா, ஜானகி! இதிலிருந்து உனக்கு வேண்டிய ஒன்றிரண்டு நகைகளை எடுத்துக் கொள்!" என்றார்.

"என்னப்பா இது? அம்மா போய் ஒரு மாதம் கூட ஆகவில்லை. அதற்குள்..." என்று இழுத்தாள். அவள் கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது.

"பரவாயில்லை, அம்மா! நான் மட்டும் என்ன சாஸ்வதமா? எனக்கும் வயசாயிடுத்து. நாளும் உன் அம்மாவைப் போல் ஒருநாள் கண்ணை மூடிவிட்டால் நீ, மன்னிமார்கள் இதைக் கொடுக்கவில்லை, அதைக் கொடுக்கவில்லை என்று குறைப் பட்டுக் கொள்ளக் கூடாது பார்! அதற்காகத்தான் சொன்னேன். வேறொன்றுமில்லை" என்று சொல்லிக் கொண்டே பெட்டியைத் திறந்தார்.

நான் தாத்தாவுக்கு அருகிலிருந்தேன். பெட்டியில் மேலாக இருந்த முத்துவளை என் மனதைக் கவர்ந்தது. நான் ஆவலுடன் அதைப் பார்த்துக் கொண்டே "ஏன் தாத்தா! இதுகூடப் பாட்டியினுடையதா! பார்க்க அழகாயிருக்கே" என்றேன்.

அதற்குள் அத்தை "ஏன் வஸந்தி, உனக்குப் பிடித்தால் அதை எடுத்துக் கொள்ளேன். என்னிடம்தான் ஏற்கெனவே இதே மாதிரி இருக்கிறதே" என்று சொல்லிக் கொண்டே, முத்து வளையை எடுத்து, என் கையில் போட்டாள்; சரியாக இருந்தது. தாத்தாவும் "உனக்குச் சரியாக இருக்கிறதம்மா. நீயே வைத்துக் கொள்" என்றார்.

உடனே அம்மாவிடம் அதைக் காட்டுவதற்காக அங்கிருந்து ஓடினேன். வழியில் புவனா வந்தாள். அவளிடம் பெருமையாக, "பாரடி! பாட்டியுடைய வளையலை எனக்கே தாத்தாவும் அத்தையும் கொடுத்துட்டா" என்று சொன்னேன்.

"அப்படின்னா, நானும் தாத்தாவிடம் கேட்டு இதுமாதிரி வாங்கிக்கப் போறேன்" என்று சொல்லிக் கொண்டே புவனா ஓடி விட்டாள். நானும் அம்மாவிடம் சென்று நடந்தவைகளைச் சொல்லி வளையலைக் காட்டினேன். அம்மா ஒன்றுமே சொல்லவில்லை.

அதற்குள் கூடத்திலிருந்து புவனாவின் அழுகுரல் கேட்டது. நானும் அம்மாவும் அங்கு போனோம்.

"ஏன் புவனா அழுகிறாள், ஜானகி!" என்று அம்மா கேட்டாள்.

"ஒன்றுமில்லை, மன்னி. வஸந்திக்குக் கொடுத்த முத்துவளை அவளுக்கு வேண்டுமாம். இவள் சிறியவள்தானே! இவளுக்கு அது பெரிசாய் இருக்காதா? அதனால் இந்த முத்து மாலையை எடுத்துக் கொடுத்தால், வேண்டாமாம். வீண் பிடிவாதம் பிடிக்கிறது, கழுதை!" என்று புவனாவைத் திட்டினாள்.

"குழந்தையைத் திட்டாதே! ஜானகி, வஸந்தி என்ன சின்னக் குழந்தையா! சொன்னால் தெரியாதா! வீணாகக் குழந்தையை ஏன் அழ விடுகிறாய்?" என்று சொல்லிக் கொண்டே, என்னிடம் "வஸந்தி, வளையைக்



கழற்றி புவனாவிடம் கொடு. குழந்தையை அழவிடாதே. இது உனக்குத் தெரிய வேண்டாமா?" என்று சாந்தமாகக் கூறினான்.

எனக்கு வளையலைக் கழற்ற மனமே வரவில்லை. கண்களில் நீர் ததும்பியது. இதைப் பார்த்த அத்தை, "நீ கழற்றாதே வசந்தி, அது உனக்குத்தான் சரியாக இருக்கிறது. புவனாவுக்குப் பெரியது. அதை அவள் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாள்? கொஞ்ச நேரம் அழுவாள். பிறகு சமாதான மாகிவிடுவாள். வா, சாப்பிட நாழியாயிடுத்து போகலாம்" என்று என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே போனான்.

"வசந்தி!" என்று அம்மா ஆத்திரத்துடன் கூப்பிட்டாள். நான் திரும்பிப் பார்த்தேன். அம்மாவின் முகம் ஆத்திரத்தால் சிவந்திருந்தது.

"நான் சொன்னதைக் கேட்காமல் போகிறாயா! உனக்கு எவ்வளவு தைரியம்?" என்று கேட்டுக் கொண்டே அருகில் வந்து, என் கையிலிருந்து வளையல்களைக் கழற்றி புவனாவிடம் கொடுத்தாள். புவனாவின் அழுகை சட்டென்று நின்று விட்டது.



வளையை புவனாவுக்குக் கொடுத்தது கூட எனக்குப் பெரிதாகப் படவில்லை. ஆனால், அம்மா எல்லோர் முன்னிலையிலும் என்னைக் கோபித்துக் கொண்டதுதான் அவமானமாக இருந்தது. அழுகையையும் அடக்க முடியவில்லை. அங்கிருந்து உடனே ஒருவருடனும் பேசாமல் என் அறையில் சென்று படுக்கையில் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதேன். அத்தை புவனாவைத் திட்டிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் சென்ற பின் தாத்தாவும் அத்தையும் வந்து சமாதானம் செய்தார்கள். ஆனால் என் மனம் சமாதானம் அடைந்தால் தானே? யாரையும் நிமிர்ந்து பார்க்கவே எனக்கு அவமானமாக இருந்தது. எல்லாரும் சொன்னதற்காகக் குனிந்த தலை நிமிராமல் ஏதோ சாப்பிட்டேன் என்று பெயர் செய்து விட்டு மறுபடியும் என்னுடைய அறைக்குள் வந்து விட்டேன்.

சாப்பிட்டு விட்டு என் பின்னாலேயே அண்ணா மணியும் என் அறைக்கு வந்தான். அவன் வந்தது எனக்குத் தெரியாது. என் அருகில் வந்து 'வசந்தி' என்று குழைவாகக் கூப்பிட்டான். நான் திரும்பிப் பார்த்தேன்.

"என்ன வசந்தி! இன்னுமா அழுகிறாய்? கேவலம் ஒரு வளைக்காக இப்படி முகம் சிவக்க அழலாமா? என்ன பிரமாதம்! அடுத்த வருஷம் லீவுக்கு வந்தவுடன், முதலில் உனக்கு இதைவிட அழகான வளை வாங்கித் தருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே தன் கைக் குட்டையால் என் கண்ணீரைத் துடைத்தான்.

"அண்ணா! நான் வளைக்காக அழவில்லை. ஆனால், அம்மா என்னை எல்லோர் முன்னிலையிலும் திட்டினதுதான் அவமானமாக இருக்கிறது, அண்ணா!" என்று சொல்லிக் கொண்டு அவன் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு தேம்பினேன்.

மணி என் தலையை அன்புடன் தடவிக் கொண்டே "நாங்கள் எல்லாரும் உன்னிடம் எவ்வளவு பிரியமாக இருக்கிறோம் என்பது தெரிந்ததுதானே? அம்மா உன்னை மனதாரத் திட்டுவாளா! அதை நீ தெரிந்து கொள்ளவில்லையே? நமக்கு இருப்பது ஒரே அத்தை. அவளைக் கேவலம், ஒரு ஜதை வளைக்காக மனஸ் தாபப்பட விடக்கூடாதே என்று உன்னைக் கோபித்துக் கொண்டாள். அவள் 'குழந்தையைத் திட்டிவிட்டேனே!' என்று புலம்புவதைப் போய்ப் பார். இன்னும் அம்மா சாப்பிடவில்லை. நீயே போய்ச் சமாதானம் செய்தால்தான் சாப்பிடுவாள். இன்று மாலை நாம் ஊருக்குப் புறப்பட வேண்டாமா! வா, அம்மாவிடம் போகலாம்" என்று கூப்பிட்டான். நானும் மௌனமாக அண்ணாவைப் பின் தொடர்ந்தேன்.

அம்மாவைப் பார்த்ததும் நான் திடுக்கிட்டேன். அம்மாவின் முகம் அழுததால் சிவந்திருந்தது. இன்னும் அழுது கொண்டிருந்தாள். நான் அம்மாவின் அருகில் சென்று, "அம்மா! என்னை மன்னித்து விடு. நான் தெரியாமல் வீணாக உன் மனத்தைப் புண்படுத்தி விட்டேன். அழாதே!" என்றேன்.

"எதற்கு வசந்தி உன்னை மன்னிக்க வேண்டும்? நான்தான் தெரியாத்தனமாய் எல்லோர் எதிரிலும் உன்னைக் கோபித்துக் கொண்டேன்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது புவனா வந்து, "வசந்தி, இந்தா வளை. இது எனக்குப் பெரிசாயிருக்கு. நீயே போட்டுக்கொள். எனக்கு வேண்டாம்" என்றாள். அம்மா என்னைப் பார்த்தாள். நான் சிரித்துக் கொண்டே, "வேண்டாம் புவனா! இப்போ நீயே வைத்துக் கொள். எனக்கு வேண்டிய போது உன்னிடமிருந்து வாங்கிக் கொள்கிறேன்" என்றேன். அண்ணாவும் அதை ஆமோதித்தான்.

நான் அம்மாவைச் சாப்பிட அழைத்துச் சென்றேன். சிரித்துப் பேசிக் கொண்டே ஒன்றுமே நடக்காதது போல் அத்தை, அம்மா, சித்தி மூவருக்கும் சாதம் பரிமாறி

னேன். அவர்கள் சாப்பிட்டு எழுந்திருக்கவும், அப்பா வெளியிலிருந்து வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது.

அன்று மாலை நாங்கள் சென்னைக்குப் புறப்பட்டோம். அத்தை, புவனு, தாத்தாவுடன் கான்பூருக்குப் புறப்பட்டுச் சென்றான்.

அந்த வருஷம் அண்ணா மாகாணத்திலேயே முதலாகத்தேறினான். அவன் வாசித்த கலாசாலையிலேயே வேலையும் கிடைத்தது.

அதற்குள் எனக்கும், பெங்களூரிலிருந்த கோபால் என்பவருக்கும் கல்யாணம் நிச்சயம் செய்யப்பட்டது. அப்போது அவர் எம். ஏ. பாஸ் செய்துவிட்டு ஐ. ஏ. எஸ். பரீட்சைக்காகப் படித்துக் கொண்டிருந்தார்.

மாப்பிள்ளை அழைப்பன்று என்னிடம் ஓர் அழகிய தந்தப் பெட்டியை அண்ணா கொண்டு வந்து கொடுத்தான்.

"இதில் என்ன அண்ணா இருக்கிறது?"

"பெட்டியைத் திறந்து உனக்குப் பிடித்திருக்கிறதா, பாரேன்!" என்றான். திறந்து பார்த்தேன். அதில் அழகிய வேலைப்பாடமைந்த ஒரு ஜதை நல்முத்து வளைகள் பிரகாசித்தன. அவற்றை எடுத்து அண்ணாவே என் கையில் போட்டு, "இது என் அன்பளிப்பு" என்றான் மகிழ்ச்சியுடன்.

நன்றியுடன் "அண்ணா, அன்று சொன்ன வாக்கை நிறைவேற்றி விட்டாயே!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினேன்.

கல்யாணம் இனிது முடிந்தது. உடனேயே பெங்களூரில் 'கிருஹப்பிரவேசம்' செய்வதற்காக என்னை அழைத்துச் சென்றனர். அங்கு பத்து நாட்கள் இருந்தேன். பிறகு நானும் அவருமாகச் சென்னைக்கு வந்தோம். அவர் பரீக்ஷை யெல்லாம் முடியும் வரை நான் பிறந்தகத்திலேயே இருக்க வேண்டுமென்று ஏற்பாடாயிற்று.

என் கணவர் பிரிய மனமில்லாமல் பெங்களூர்சென்றார். அண்ணாவைக் கலாசாலையிலேயே அவருடைய மேல் படிப்பிற்காக அமெரிக்காவுக்கு அனுப்பினார்கள். என் தகப்பனாருக்கும் டெல்லிக்கு மாற்றலாகி விட்டது. நானும் பெற்றோரும் டில்லிக்குப் போனோம்.

நாட்கள் உருண்டன. என் கணவரின் பரீக்ஷை முடிந்ததும் டெல்லிக்கு வந்திருந்தார். அங்கு இரண்டு மாதம் தங்கியிருந்தார். அதற்குள் பரீக்ஷையில் 'ஸெலக்ட்' ஆகி 'இண்டர்வியூ'வுக்குக் கூப்பிட்டிருந்தனர். அவர் சென்னைக்கு வந்தார். அதிலும் தேறி நல்ல வேலையாகச் சென்னையிலேயே வேலையும் கிடைத்தது.

சென்னையில் சௌகரியமான வீடு கிடைத்து, நாங்கள் குடித்தனம் ஆரம்பிப்

பதற்குள் நான்கு மாதங்கள் ஓடிவிட்டன. அம்மா என்னைச் சென்னைக்கு அழைத்து வந்து குடித்தனம் வைத்துச் சில நாள் தங்கியிருந்து விட்டுப் பிறகு டெல்லிக்குப் போய் விட்டாள்.

சில மாதங்களாக நானும் அவரும் மாம்பலத்தில் வசித்து வருகிறோம். அதற்குள் அண்ணா அமெரிக்கா சென்று இரண்டு வருஷங்களாகி விட்டன. அவன் தன் படிப்பை ஒன்றரை வருஷத்திற்குள், முடித்துக் கொண்டு ஆறு மாதமாக அங்கு பல ஊர்களையும் சுற்றிப் பார்க்கக் கிளம்பி யிருந்தான். நான்கு மாதங்களாக அவனிடம் இருந்து கடிதமே வரவில்லை. அவன் எங்கிருக்கிறான் என்ற தகவலே தெரியவில்லை. எனக்குக் கவலையாக இருந்தது. பிறந்தகத்திலிருந்து அண்ணாவைப் பிரிந்தறியாத நான் இப்போது அவனைப் பார்த்தே இரண்டு வருஷங்களாகின்றன என்ற எண்ணம் தோன்றியதும், என் கண்களிலிருந்து கண்ணீர் முத்துக்கள் உதிர்ந்தன. நீண்டதொரு பெருமூச்சும் வெளி வந்தது. எத்தனை நேரம் இப்படி இருந்தேனோ எனக்குத் தெரியாது.

"வஸந்தி, மணி ஏழரை ஆகிறதே! இன்னுமா புறப்படவில்லை? கோவிலுக்குப் போக வேண்டாமா?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார் என் கணவர்.

நான் அவசர அவசரமாகக் கண்ணைத் துடைத்துக் கொண்டு, "இதோ வந்துவிட்டேன்! இந்த வளையைப் போட்டுக் கொள்ளலாம் என்று பார்த்தேன். காணவில்லை. அதைத் தேடிக் கொண்டிருந்தேன். நாழியாயிடுத்து. இப்போதான் கிடைத்தது" என்று சொல்லிக் கொண்டே வெளியே வந்தேன்.

என்னைப் பார்த்த அவர் "இன்றைக்குத் தேவிக்கு முத்துச் சேவை போலிருக்கிறது!" என்றார் சந்தோஷத்துடன்.

நான் அவருக்குப் பதில் சொல்வதற்குள் வாசலில் ஏதோ கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து வேலைக்காரன் வந்து அவரை யாரோ அழைப்பதாகச் சொன்னான். இவர் முன்புறக் கூடத்துக்குச் சென்றார்.

யார் வந்திருக்கிறார்கள் என்று அங்கிருந்த ஜன்னல் வழியாகக் கூடத்தைப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். வந்திருந்தது வேறு யாருமில்லை. என் அண்ணாதான். முன்னைவிட நன்றாக வளர்ந்திருந்தான்.

உடனே நான் ஓட்டமும் நடையுமாகக் கூடத்துக்கு வந்தேன். மணியும், அவரும் குசலம் விசாரித்துக் கொண்டிருந்தனர்.

வேலைக்காரன் அண்ணாவின் பெட்டி படுக்கைகளை உள்ளே கொண்டுபோய் வைத்தான்.

நான் மகிழ்ச்சியுடன் "வா அண்ணா! உனக்கு நூறு ஆயுசு. இப்போதான் இந்த வளையைப் போட்டுக் கொண்டதும் உன்னை நினைத்துக் கொண்டேன். உன்னைப் பார்த்து ஒரு வருஷமாகி விட்டது. நீ எப்போது திரும்பி வருவாய் என்று பலதடவை நினைத்து விட்டேன். அதற்கு ஏற்றாற்போல் உன்னிடமிருந்தும் நாலு மாதமாகக் கடிதம் வராததால், உனக்கு ஏதாவது உடம்பு அசௌகரியமோ என்றும் நினைத்துக் கவலைப்பட்டேன். இன்று நான் நினைத்தவுடன் என் எதிரில் வந்து விட்டாய்!" என்றேன். எனக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை.

என்னைப் பார்த்த அண்ணா, அடடா, வஸந்தியா! அடையாளமே தெரியவில்லையே! சௌக்கியமா? நான் நேற்றுத்தான் பம்பாய் வந்தேன். உடனே உன்னைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலால் டில்லிக்குக் கூடப் போகாமல் நேரே இங்கு விமான மூலம் வந்தேன்" என்றான்.

அதற்குள் அவர் "ஆமாம், மணி! முன்னைப் போல் பள்ளிக்கூட நேரம் போக, மற்ற நேரங்களில் தோட்டத்தில் ஆனந்தமாக ஆடிப் பாடித் திரிந்த வஸந்தியா இவள்! இப்போது இக் குடும்பத்தைப் பொறுப்புடன் நடத்தும் குடும்பப் பெண் வஸந்தியல்லவா இவள்! தவிர......" என்று இழுத்து விட்டு என்னைப் பார்த்தார்.

அப்பொழுதுதான், என்னை நன்றாகக் கவனித்த மணி, விஷயம் புரிந்தவனாய் "ஓகோ, சில மாதங்களில் சின்ன வஸந்தி பிறக்கப் போகிறாளாக்கும். எனக்கு ஒருவருமே எழுதவில்லையே!" என்று உற்சாகத்துடன் சொன்னான்.

வெட்கமடைந்த நான் "அண்ணா, இவருக்கு வேறே வேலையே இல்லை. என்னைச் சதா கேலி செய்வதுதான் இவருடைய பொழுது போக்கு. உள்ளே வா, போகலாம். காப்பி சாப்பிட்டு விட்டுப் பிறகு பேசலாம்" என்று சொல்லிவிட்டு, கணவனை நோக்கி, "ஊரிலிருந்து வந்தவர்களை உபசரிக்கும் முறை மிகவும் நன்றாக இருக்கிறது, வாசலிலேயே எல்லா விஷயங்களையும் பேசிக் கொண்டு!" என்று பொய்க் கோபத்துடன் சொல்லிக் கொண்டே உள்ளே நகர்ந்தேன்.

மணியும், கணவரும் சிரித்துக் கொண்டே என்னைத் தொடர்ந்து உள்ளே வந்தனர்.

அட்டைப்பட விளக்கம்

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. ஸி.

## 37. கதையாய் முடிந்ததே!

சித்திரக் கலையில் விஷயம் அல்ல பிரதானம். உணர்ச்சியும் அல்ல பிரதானம், என்பது சாமானியமாகத் தெரிந்த காரியம்.

தொன்று தொட்டு வந்த பழமையாய்ப் போன காரியமாகவே இருக்கலாம். அதல்ல நமக்கு விஷயம்.

காதலி நாயகனை எதிர்பார்க்கிறாள். ஏக்கத்தோடு எதிர்பார்க்கிறாள். நேரம் அந்தி நேரம். இதைவிடப் பழமையான காரியம் ஒன்று இருக்கவா முடியும்? ஆனாலும், கலைஞர்களுக்கு இதுதான் விஷயமாய் இருக்கிறது. கோடுகளாலும் புள்ளிகளாலும் வர்ணங்களாலும் காதலியின் ஏக்கத்தை பாவ ரூபமாகக் கொண்டு வரப் பார்க்கிறார்கள். பாவ ரூபம் வந்த மாத்திரத்தில் வெற்றிதான், கலைதான்.

இந்த விதமாக விஷயமோ விஷயத்தோடு ஒட்டிய உணர்ச்சியோ லக்ஷ்யமல்ல—ரூபந்தான், வெளியீடுதான், பாவந்தான் லக்ஷ்யம். பேரம் கீரம் ஒன்றும் கிடையாது இதில்.

கவிக்கு வந்த மாத்திரத்தில் இந்த உண்மைகளெல்லாம் மெள்ள நழுவி விடுகின்றன. விஷயத்தையே பார்த்து அதோடு நின்று விடுகிறார்கள். பிறகு "என்ன ஸார் இது? தமிழ்ப் புலவர்களுக்கு இந்த நைந்து போன காரியந்தானா கிடைத்தது? பெண்ணாம், காதலனாம், ஏக்கமாம். விட்டுத் தொலைங்க, ஸார்" என்று சொல்லத் தலைப்பட்டு விடுகிறார்கள்.

கவிக்கலை சித்திரக் கலையைப் போல அத்தனை புண்ணியம் செய்யவில்லை!

• • •

தொண்டை நாட்டுக்கு அரசன் நந்தி வர்மன். அவனுடைய ஊர் மலைப்

பிரதேசத்தில் இருக்கிறது (தமிழ் நாட கத்துக்கு, மலை வேணும்).

அந்த நந்திவர்மன் ஊரில் சுனை, தடா கம் எல்லாம் இருக்கிறது.

நேரம் அந்திநேரம். நாயகனைப் பல நாளாக எதிர்பார்த்துக் கொண்டிருக் கிருள். மழை காலம் வரப் பார்க்கிறது. நாயகனும் வராமல் மழையும் பெய்து விட்டால், குடிமோசம் என்பதாகப் பயப்படுகிருள்.

சுனையின் கரையில் உட்கார்ந்து கொண்டு புஷ்பங்களையும், வண்டுகளை யும், நீர்ச்சுழியில் குமிழிகள் சுற்றி வருவதையும், அதோடு சின்னஞ் சிறு தும்பிகள் (தட்டான்கள்) சுற்றி வரு வதையும் ஏதோ மயக்கமான நிலையில் இருந்து பார்த்துக் கொண்டிருக்கிருள். மயக்கம் காரணமாகவே அந்தக் காட்சி யோடு ஒன்றுபட்டு விடுகிருள் பெண். பிறகு புலப்பம் தானே.

"சிவனை நொடியும்
மறவாத சிந்தையான்
ஜெயமின் உறவு
தவிராத நந்தியூர்

நந்திவர்மன் சதா சிவபெருமானைத் தியானித்துக் கொண்டிருக்கிற பக்தன். யுத்தம் என்றால் வெற்றிதான் அவ னுக்கு. ஜெயலக்ஷ்மி (ஜெயமின்) சதா உடன் வசிப்பவள். அந்த நந்திவர்மனது ஊரில்:

"குவளை மலரில்
மதுவாரும் வண்டுகாள்!
குமிழி சுழியில்
விளையாடும் தும்பியே!

காதல் வெறி, பிரிவாற்றுமை, பயம் எல்லாம் சேர்ந்து வண்டுகளோடும் தும்பிகளோடும் பேசச் செய்கிறது.

மேலும் பூமியெங்கும் (அவனி) மழை பெய்துவிடும் போலிருக்கிறதே! காதலர் சொன்ன அவதி நாளும் தான் வந்து விட்டதே!

"சிவனை நொடியும்
மறவாத சிந்தையான்
ஜெயமின் உறவு
தவிராத நந்தியூர்க்

குவளை மலரின்
மதுவாரும் வண்டுகாள்
குமிழி சுழியில்
விளையாடு தும்பியே

அவனி மழைபெய்
குளிர்காலம் வந்ததே
அவரும் அவதி
சொனநாளும் வந்ததே,—

கவலை பெரிது
பழிகாரர் வந்திலார்
கணவர் உறவு
கதையாய்மு டிந்ததே!"

விஷயம் பழைய விஷயம்தான். புதி தாக ஒன்றும் இல்லை. பாஷை, மக்கள் பேசுகிற பாஷை. (ஆயிரம் வருஷத் துக்கு முன்னுள்ளது.) வார்த்தைகளின் சாயல்கள், தாளத்தோடு நடனமாடுகிற நடனங்கள் எல்லாம் சேர்ந்து அற்புத மான கவியை நமக்குத் தந்து விடுகிறது. சித்திரக் கலையில் உள்ள கோடு, புள்ளி, வர்ணம் இவைகளுக்குப் பதிலாகத் தமிழ் வார்த்தைகள் வந்து ஒரு நடனம் ஆடி விட்டுப் போகின்றன. ஆம். கலைதான்!



# மச்ச கன்னிகை

**துஷ்யந்தன்**

உலகமெல்லாம் உறங்கும் போது, நான் மட்டும் அந்த நதிக்கரையில் கண் விழித்துக் காத்திருந்தேன். சலசலத்து வரும் ஆற்று ஜலத்தைத் தழுவி வந்ததாலோ அல்லது குளுமையான நிலவு வெளிச்சத்தில் தவழ்ந்து வந்த காரணத்தாலோ என்னைச் சூழ்ந்து வீசிய காற்றிலே உடலையும் உள்ளத்தையும் சிலிர்க்க வைக்கும் சக்தி யிருந்தது. ஆற்றோரம் பரந்து கிடந்த பசும் பொன் வயல்களிடையே கபில நிற வரப்புகள் 'பளிச்' சென்று காட்சியளித்தன, மனித சமுதாயத்தின் விரிந்த வாழ்க்கையில் குறுக்கிட்டு வரம்பு கட்டி நிற்கும் சட்ட திட்டங்கள் போல. ஆமாம், மனசிலுள்ள ஆசைகளுக்கும் இந்த மாதிரி ஒரு வரப்பு கட்டி வைத்தால் நல்லது. இல்லாவிட்டால் இந்த நிசிவேளையில் தன்னந்தனியாக இந்த இடத்தில் ஒரு மச்ச கன்னிகைக்காகக் காத்திருப்பேனா?

நான் சில்ஹட் பிரதேசத்துக்குப் புறப்படும் போது என்னைப் பைத்தியம் என்றே முடிவு கட்டி விட்டார்கள். பத்திரிகைச் செய்தி ஒன்றை நம்பிக் காண முடியாத ஒரு பொருளைத் தேடி நான் செல்வதாகப் பரிகசித்தார்கள். சில்ஹட் ஜில்லாவின் சில கிராமங்களில் நதிக்கரையில் ஒரு மச்ச கன்னியைப் பார்த்ததாக வந்த செய்தி எனக்கு மட்டும் வெறும் புரளியாகப் படவில்லை. ஏன் இருக்கக் கூடாது? இந்த ஆசைதான் என்னை இங்கு இழுத்து வந்தது.

வானத்து விண் மீன்கள் பார்த்துப் பரிகசிக்க, பண்ணிசைத்துப் பெருகிவரும் புதுப் புனல் 'களுக் களுக்'கெனக் கேலி செய்ய, வாய்க்கால் வரப்பிடையே தவளையினம் ஆர்ப்பரித்து எக்காளமிட நான் ஆசையோடு அந்த மச்ச கன்னிகைக்காகக் காத்திருந்தேன்.

யாரோ என்னைத் தொட்டு எழுப்புவது போல இருந்தது. கண்ணைக் கசக்கிவிட்டுப் பார்த்தேன். கனவில்லை. எதிரே உண்மையிலேயே அந்த ஜல மோகினி நின்று கொண்டிருந்தாள் — இல்லை—நதிக் கரையிலிருந்த பாறை யொன்றில் தன் கைகளை ஊன்றி ஜலத்தில் பாதியும் நிலத்தில் பாதியுமாகக் காட்சி யளித்தாள். மோகனமான பெண் உருவம். கனவுலகுக்கு இழுத்துச் செல்லும் கரு விழிகள். அவைதான் எத்தனை ஆயிரம் காவியங்கள் பேசுகின்றன! பொலிவுற்றுப் பூத்துக் குலுங்கும் பருவம். அங்கமெல்லாம் அழகு பொங்கி வழிந்து கொண்டிருந்தது. ஆனால்......ஜலத்தில் அமிழ்ந்திருந்த உடலின் கீழ்ப்புறம் மட்டும் பரிபூரணமான மச்சத்தின் வரிவடிவம். ஆமாம், மச்ச கன்னிதான். நான் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். கண் இமைத்தால் அந்த நொடிப் போதில் அவள் மறைந்து விட்டால்? ஆனால் அப்படி யொன்றும் அவள் பயந்தோடிப் போவதாகத் தெரியவில்லை. பாறையின் மேல் சாய்ந்தபடியே என்னைத் தன் அருகில் வரும்படி அழைத்தாள். நான் மெல்லத்தான் போனேன். பாறையருகில் மண்டியிட்டு உட்கார்ந்தேன். அவள் கேட்டாள்.

“இப்படிக் கண்ணுறங்காமல் காத்திருந்து என்னைப் பார்த்தாயே, என்ன அதிசயத்தைக் கண்டு விட்டாய்?”

என் தலை கவிழ்ந்தது.

பகலெல்லாம் மனிதர்களிடம் பத்தாயிரம் பொய்களுடன் பிரமாதமாகப் பேசும் நான் அவள் கேள்விக்குப் பதில் சொல்ல முடியா

மல் தலை கவிழ்ந்து விட்டேன். உண்மையில் எதைக் கண்டேன்? கண்டதை அவளிடம் சொல்ல முடியுமா? இப்படி யோசித்துக் கொண்டிருந்தபோது மீண்டும் அவளாகவே பேசினாள்:

" உலகெலாம் மயங்க வைக்கும் பேரழகுப் பூம்பாவை. கருத்தழியச் செய்யும் கன்னிப் பெண்......இப்படி யெல்லாம் சொல்லத் தோன்றுகிறது இல்லையா? அப்படித்தானிருக்கும். இந்த அழகினால்தான் நான் இப்படிச் சாந்தியற்றுக் குமுறிக் கொந்தளிக்கும் கடல் கன்னியாக வாழ்கிறேன்" என்று கூறிவிட்டுத் தன் கதையைச் சொன்னாள்.

## 2

அதோ தெரிகிறதே, அந்த இடத்தில் பல காலத்துக்கு முன்னால் அமைதியான சூழ்நிலையில், அடக்கமான ஓலைக் குடில் ஒன்றில் நான் இருந்து வந்தேன். அப்பொழுது நான் மானிடப் பெண்ணாகத்தான் இருந்தேன். மோனத் தவம் செய்யும் மகா முனிவர் ஒருவருக்குப் பணிவிடை செய்ய வந்திருந்தேன். பகலெல்லாம் அவருக்கு வேண்டியவைகளைக் கவனிப்பதில் கழிந்து போகும். இரவுப் பொழுதில் அவர் நிஷ்டையில் அமர்ந்ததும் நான் இந்த நதிக்கரையில் வந்து உட்கார்ந்து கொள்வேன். நீரிலே தெரியும் என் மோகனமான உருவத்தைக் கண்டு பெருமை கொள்வேன். அந்த இன்பப் போதையில் என்னை மறந்து நாழிகை போவது கூடத் தெரியாமல் இங்கே இருந்து விடுவேன்.

இப்படியாக ஒரு நாள் நான் இங்கே உட்கார்ந்திருந்த போதுதான் ஒரு ஜல மனிதனைக் கண்டேன். அழகான ஆணுருவம் — உடலின் கீழ்ப்புறம் மட்டும் மீனைப் போல இருந்தது. முதன் முதலாக நான் அப்பொழுதுதான் ஜல மனிதனைக் கண்டேன். இருந்தாலும் அந்த அழகு என்னைக் கவர்ந்தது. மகா சமுத்திரத்தின் கம்பீரம் அத்தனையும் அவனிடம் தேங்கி யிருந்தது. பாய்ந்து வரும் அலைகளெல்லாம் அசைக்க முடியாத திரண்ட தோள்கள். ஒளி வீசும் கண்கள். ம்...அதிகமாகச் சொல்வானேன்? அப்பொழுதே என் மனசைப் பறி கொடுத்து விட்டேன்.

இப்படி எத்தனை நாழிகை இருந்து விட்டேனோ? பொழுது விடிந்து விட்டது.

என் உடல் நடுங்கியது. மனசு படபடத்தது. பயம் முன்னே தள்ளக் கால்கள் பின்னுக்கிழுக்க ஆசிரமத்தை நோக்கிப் போனேன்.

" அபலைப் பெண்ணே, போ. மீண்டும் உன் காதலனிடமே போய்விடு. நீயும் ஒரு மச்ச கன்னியாகப் போவாய். ஆனால், கடமையை மறந்துவிட்ட உனக்கு மனச் சாந்தி மட்டும் கிட்டாது. போ" என்று கோபத்தில் சாபமிட்டார் மகா முனிவர்.

நானும் மச்சகன்னியாகி நதிக்கரையில் என் காதலன் வருகைக்காகக் காத்திருந்தேன். இரவின் பின்னேரத்தில் அவர் வந்தார். என் உருவத்தைக் கண்டு திகைத்த அவரிடம் முனிவரின் சாபத்தைச் சொன்னேன். அகன்ற தமது மார்பின்மீது என்னைத் தாங்கியபடி அவர் ஆறுதல் சொன்னார்.

" பயப்படாதே, என்னோடு வந்துவிடு. எங்கள் தீவுக்குப் போகலாம்" என்று அழைத்துச் சென்றார்.

நதியின் போக்கோடு போய்ச் சமுத்திரத்துக்கு வந்ததும் எனக்கு அச்சமாகப் போய் விட்டது. ஆயிரமாயிரம் ஜல ராசிகள் எங்களைச் சூழ்ந்து வந்தன. சில சமயங்களில் பிரம்மாண்டமான கொம்பு சுறாக்கள் எதிர்ப்பட்டன. பயத்தால் நடுங்கும்



உடலை அவர் தம்முடலோடு அணைத்தபடி வெகு வேகமாக முன்னேறிச் சென்றார்.

மேற்குத் திசையில் தெரிந்த ஒரு சிறு தீவுப் பக்கம் அவர் என்னைக் கூட்டிச் சென்றார். தீவின் ஒரு பக்கத்தில் நதி யொன்று வந்து சமுத்திரத்தில் சங்கம மாகிறது. அந்த நதி யின் போக்கை எதிர்த்து அவர் போனார். கொஞ்ச தூரத்தில் அது திரும்பி வளைந்து போகிறது. அந்த இடத்தில் அவர் நதிக் கரையில் ஏறிவிட்டார். நானும் மெதுவாக அவரைப் பின் பற்றினேன். பக்கத்தில் ஒரு வாய்க்கால், ஆனால் ஆழமாக இருந்தது. அதன் வழியே அவர் நீந்திச் சென்றார். அப் பொழுதுதான் கவனித்தேன். யாரோ பாடு வது போல இருந்தது. மீண்டும் கேட்டது.

"அதோ பார், மச்சபாணன் பாடுகிறான்!" என்று அவர் காட்டிய பக்கம் பார்த்தேன்.

ஜலத்தைத் தொட்டு முத்தமிட்டபடி ஒரு மரக் கிளை அங்கே யிருந்தது. உடலின் மேல் பாகத்தை அதன்மேல் ஊன்றியபடி ஒரு ஜல மனிதன் பாடிக் கொண்டிருந்தான். அருகில் நெருங்கியதும் நான் மெய் மறந்து போனேன்.



ஆகா, என்ன அற்புதமான இசை! சமுத்திர தேவதையே அந்த தேவ கானத்தில் உள்ளத் தைப் பறி கொடுத்துப் பொங்கிப் பொங்கி எழுந்து கூத்தாடுகின்றாளே!

சட்டென்று பாட்டு நின்றது.

மேலே குதித்து மச்சபாணன் எங்களருகில் வந்தான். "இவன் என் தம்பி" என்றார் என் அருமைக் காதலர்.

"உங்கள் தம்பியா?" என்று கேட்டுவிட்டு அந்தப் பக்கம் திரும்பினேன்.

மோகன கீதம் பாடும் மச்சபாணன் அத ரங்கள் இப்பொழுது படபட வென்று ஏனோ துடித்துக் கொண்டிருந்தன. கண்களில் பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. பெண்ணாகப் பிறந்த எனக்குக் காரணம் தெரிந்து விட்டது.

"பகவானே, நீதான் காப்பாற்ற வேண் டும்!" என்று மனசுக்குள் பிரார்த்தனை செய்து கொண்டேன்.

## 3

நான் அந்தத் தீவுக்கு வந்தபோது வெள்ளை நிறப் பூக்கள் ஏராளமாகப் பூத்திருந் தன. எங்கு பார்த்தாலும் பால்போலக் காட்சி யளித்தன. கொஞ்ச காலத்துக்குப் பிறகு சிவப்பு நிறப் பூக்கள் மலர ஆரம்பித்தன.

அன்று வழக்கம் போல இரவு நேரத்தில் அவரும் மச்சபாணனும் சமுத்திரத்துக்குப் போகப் புறப்பட்டார்கள். ஒளி வீசும் சந்தி ரனைக் கண்டதும் எனக்கும் அவர்களுடன் போகலாமெனத் தோன்றியது. மூவருமாகச் சமுத்திரத்துக்கு வந்தோம்.

தொலை தூரத்தில் ஒரு கப்பல் வந்து கொண்டிருந்தது. ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து வியாபாரிகள் வாணிபம் செய்ய இப்படித்தான் போவார்கள் என்று அவர் சொன்னார். "வாணிபக் கப்பலா அது? அப் படியானால் அவர்களிடம் நவரத்தினங்களும் இருக்கும் இல்லையா?" என்றேன் ஆவலுடன்.

"ஏன், உனக்கு நவரத்தின மாலையில் ஆசை விழுந்து விட்டதா?" என்று கேட்டார்.

நான் மௌனமாகத் தலையை ஆட்டினேன்.

ரொம்ப காலத்துக்கு முன் ஓர் இளவரசன் ஆசிரமத்துக்கு வந்திருந்தான். அவன் கழுத் தில் நவரத்தின மாலையைப் பார்த்திருக் கிறேன். அடேயப்பா, அதன் அழகும் மின் வெட்டும் ஒளியும் இன்னும் என் கண் முன்னே யிருக்கின்றன. பெண் என்னதான் மறைத்தாலும் அவள் ஆசை வெளிப்பட்டுத் தான் தீருகிறது. அப்படித்தான் அன்றும் நான் என்னையறியாமல் சொல்லி விட்டேன்.

"நீ இங்கேயே இந்தப் பாறைகளுக் கிடை யில் உட்கார்ந்திரு. நாங்களிருவரும் மெது வாகக் கப்பலுக்குள்ளே போய்ப் பார்க் கிறோம். நவரத்தினமாலை அகப்பட்டால் நிச்சயம் கொண்டுவந்து என் கையால் உன் கழுத்தில் இங்கேயே போட்டு விடுகிறேன்" என்றார். என் உடல் இன்பத்தால் சிலிர்த்தது.














அவர்களிருவரும் கப்பலை நோக்கிப் போவதைப் பார்த்துக் கொண்டேயிருந்தேன். லாகவமாக வாலைச் சுற்றி அதோ கப்பல் மேல் ஏறி விட்டார்களே! கப்பல் மெதுவாகத்தான் போகிறது. நிலவு வெளிச்சத்தில் அதோ...அவர்தான்! விளிம்புக்கு வந்து விட்டார். அவர் கையில் என்ன? வானத்து அத்தனை தாரகைகளும் சுடர்விட்டுப் பிரகாசிப்பதுபோல இருக்கிறதே! நவரத்தின மாலையே தான். கொஞ்ச நேரத்தில் அது என் கழுத்திலிருக்கும் ... ஐயோ, அவர் பின்புறமாக யாரோ வந்து கத்தியால் குத்துகிறார்களே?...அவர் தம்பியா அது?...மச்சபாணனா அது? பகவானே! ரத்தம் கசியும் அவருடல் கீழே விழுகிறதே! அதோ! ஒரு கையில் அவரிடமிருந்து பறித்த ரத்தின மாலையும் மற்றொரு கையில் ரத்தம் தோய்ந்த கத்தியுமாக நிற்பது அவர் தம்பி - உடன் பிறந்தவன். ஐயோ, நம்ப முடியவில்லை.

நான் கோவென்று கதறி விட்டேன்.

மறு கணம் கப்பலில் ஒரு குழப்பம். ஏராளமான சத்தம் தட தடவென்று பல பேர் ஓடுவதுபோல இருந்தது. நீரிலே குதிக்கும் தருவாயிலிருந்த மச்சபாணனைக் கப்பலில் இருந்தவர்கள் பிடித்துவிட்டார்கள்.

நான் என் இரு கைகளாலும் கண்களை இறுக மூடிக் கொண்டேன்.

கண்ணீர் பிரவாகமாகப் பெருகி என் உடலை நனைத்து விட்டது.

செயலற்று அந்தப் பாறைகளின் மேல் சாய்ந்த நான் வெகு நாழிகைக்குப் பிறகு தான் எழுந்தேன்.

என் காலடியில் அவர் குருதி பாய்ந்து, அப்பாறைகளை யெல்லாம் பவளக் குன்றுகளாக்கி யிருந்தது.

சுற்றிக் கிடந்த சிப்பிகளிலே என் கண்ணீர்த் துளிகள் விழுந்து முத்தாக மாறின்றன. அவை இனிமேல் எங்காவது ஒரு பேரழகியின் கழுத்திலே முத்தாரமாக ஊசலாடும். ஆனால் அவளுக்குத் தெரியுமா இவை எப்படிப் பிறந்தன என்று?

மகாராஜாவுக்கு ஏற்ற அதி உன்னத காணிக்கையாக, விசித்திரப் பொருளாக, மச்சபாணனை அந்த வணிகர்கள் கொடுத்திருப்பார்கள். ஆனால் அவருக்குத் தெரியுமா அவன் ஏன் இந்தக் கதிக்குள்ளானன் என்று?

இத்தனைக்கும் என் ஆசைதான் காரணம். அழகுதான் காரணம். அழகும் ஆசையும் ஆபத்தானவை தெரிகிறதா?..."

* * *

சுளீரென்று வெய்யில் உடலில் சுரீரென்று படவே கண் விழித்துப் பார்த்தேன். அமைதியான அந்த ஆற்றங் கரையிலே நேற்றிரவு நான் படுத்திருந்த இடத்திலேயே இருந்தேன். மச்சகன்னிகை கதை சொன்னளே! இப்பொழுது அவள் எங்கே? ஒருகால் மறுபடி இன்று ராத்திரி வருவாளோ என்னமோ!

## உங்களுடைய நல்ல அழகான படங்களுக்கு




### கேவாபான்

பகல் வெளிச்சத்திலும், செயற்கை வெளிச்சத்திலும் இந்த மின்னல் வேக பான்க்ரோமாடிக் பிலிம் அதிக நேர்த்தியான தெளிவையும், கலர்களைத் தத்ரூபமாகப் . பிரதிக்கும் தன்மையும் கொண்டது.

சைஸ் 620 & 120—ரூ. 2/4




### கேவாகுரோம்

பகல் வெளிச்சத்திற்கு உகந்த ஆர்தோகுரோமாடிக் பிலிம், நல்ல பிரதிக்கும் தன்மை, பிரகாசமான படிகள் பதிவு, விசாலமான தேர்ந்தப் பிடிப்பு, மற்றும் நல்ல தெளிவு வாய்ந்தது.

சைஸ் 620 & 120—ரூ. 2/1






இவை விவரங்களுக்கும் "கேவார்ட்" எக்ஸ்போஷர் கார்டு கேட்டதுக்கும் கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

**Allied Photographics Limited**

அல்லைட் போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்

செல்லிங் டிபார்ட்மெண்ட்) கஸ்தூர் பில்டிங்ஸ், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள் : பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • புது டில்லி

# 14 நாட்களில் மக்ளீன்ஸ் உதவியால் அதிக வெண்மையான பற்கள்




இப்பொழுது 14 தினங்களுக்குள் அதி வெண்மையான பற்களை நீங்களும் பெறலாம். இதை உறுதியாகச் சொல்லுங்கள் —தினந்தினமும்—தினசரி இருமுறை உங்கள் பற்களை நன்றாக மக்ளீன் செய்யுங்கள். ஆரம்பமுதலே, மக்ளீனிலுள்ள விசேஷ பொருள்கள், மிருதுவாகவும் அபாயமில்லாமலும் உங்கள் பற்களில் உள்ள அவலட்சணமான கறைகளை போக்கி, அவைகள் இயற்கையான ஒளி வீசச் செய்வதைக் காண்பீர். 14 நாட்களுக்குள் — அல்லது அதற்கும் குறைவாகவே கூட நீங்கள் பெருமைப்படக்கூடிய பற்களை அடைவீர்கள் — மக்ளீன் வெண்மையான பற்கள், ஆரோக்கியமான பற்கள்.




## மக்ளீன்ஸ்

### பெராக்ஸைட் பற்பசை

பற்களை அதிக வெண்மையாக்குகிறது.

HTY 32-TAM




## 15. தண்டனை கொடுங்கள்!

மந்திரவாதிக்குக் கைகளில் விலங் கிட்டுக் காவலர்கள் அழைத்துச் சென்று, சேனாபதியின் முன்னிலையில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

அந்த மந்திரவாதியுடன் கூடவே, சிறைக் கூடத்தின் காவலர்களை வேறு கைது செய்து கொண்டு போய் நிறுத்தினார்கள். இவர்களைப் பார்த்ததும், "இவர்களை ஏன் கைது செய்து கொண்டு வந்தீர்கள்?" என்று கோபமாகக் கேட்டார் சேனாபதி.

"ஐயா, இந்தக் காவலர்கள் சிறையிலிருந்த கைதியான சிறுவன் நந்தகுமாரனைத் தப்பி ஓட விட்டு விட்டார்கள்! அதனால் இவர்களையும் கைது செய்து கொண்டு வந்து விட்டோம்" என்றார்கள்.

"என்ன! அந்தப் பையன் தப்பி ஓடி விட்டானா? என்ன அக்கிரமம்? எல்லாம் இந்த மந்திரவாதிக் கிழவன் செய்யும் சூழ்ச்சி தான் போலிருக்கிறது! இவனை என்ன செய்தாலும் பரவாயில்லை!" என்று ஆத்திரத்தில் பொறிந்து கொட்டினார்.

ஆனால் சேனாபதிக்கு விசாரணை நடத்தித் தண்டனை கொடுக்கும் அதிகாரம் கிடையாது. நியாய ஸ்தலத்துக்குச் சென்று வழக்குத் தொடர வேண்டும். சாதாரணமாக அரசாங்க சம்பந்தப்பட்ட குற்றங்கள் யாவும் அரசனே விசாரிப்பது வழக்கம். ஆனால் இப்பொழுதுதான் இந்த நாட்டுக்கு மன்னன் இடையாதே. ஆகவே முதன் மந்திரியும் ராஜகுருவுமே எல்லா வழக்குகளையும் விசாரித்து முடிவு கட்டி வந்தனர்.

அதனால் சேனாபதி மந்திரவாதியை அழைத்துக் கொண்டு ராஜகுருவும் முதன் மந்திரியும் இருந்த இடத்துக்குப் போனார். மந்திரவாதியின் மீது நீண்டதோர் குற்றப் பத்திரிகை வாசித்தார்.

"ஐயா! இந்த மந்திரவாதி செய்துள்ள குற்றங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. நம் நாட்டுக்கு மன்னர் இல்லை என்று தெரிந்தவுடன் ஏழு பேர் கனவில் வந்து தோன்றி, காட்டில் தன் இருப்பிடம் வரைக்கும் அரசாங்கத்து முக்கியஸ்தர்களான ராஜகுரு, பிரதம மந்திரி, சேனாபதி முதலியவர்களை அலைக்கழித்தது முதல்குற்றம். இரண்டாவது குற்றம், காலை வேளையில் நகருக்குள் முதலில் நுழைபவன் தான் இந்நாட்டுக்கு மன்னன் ஆகக் கூடியவன் என்று நம்பச் செய்து, கடைசியில் ஓர் இடைப் பையனை அனுப்பி ஏமாற்றியது. மூன்றாவது, சிறையிலடைக்கப்பட்டிருந்த சிறுவனைத் தமது மந்திர சக்தியினால் தப்பி ஓடச் செய்தது! இவ்வளவு பெரிய குற்றங்கள் ராஜத் துரோகக் குற்றங்களாகும்.

எனவே, மந்திரவாதிக்குத் தக்க தண்டனை அளியுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார்.

ராஜகுரு, ''குற்றவாளி, நீர் சொல்ல வேண்டியது ஏதாகிலும் இருக்கிறதா? சேனாபதி கூறியவற்றை மறுத்துக் கூறப் போகிறீரா?'' என்று கேட்டார்.

மந்திரவாதி, ''ஆம், நான் குற்றவாளி யல்ல, பிறரை ஏமாற்ற வேண்டும் என்பதற்காக என் மந்திர சக்தியைத் துஷ்பிரயோகமும் செய்யவில்லை என்று கூற விரும்புகிறேன். உங்கள் நாட்டுக்கு அரசன் இல்லை என்று தெரிந்தவுடன், நான் ஓர் இளவரசன் வருவான் என்று கனவில் வந்து கூறிவிட்டுப் போனேன். ஒருவரிடம் சொன்னால் நம்பிக்கை ஏற்படாது என்று ஏழு பேர் கனவில் தோன்றிக் கூறிவிட்டுப் போனேன். ஆனால் யாரும் நான் கூறியதைச் சரியாகக் கேட்டு நினைவில் இருத்திக் கொள்ளவில்லை. அதனால் நீங்கள் காட்டில் என் இருப்பிடம் வரைக்கும் நடந்து வந்தீர்கள். இதற்கு நான் என்ன செய்ய முடியும்? நீங்கள் சரியாக நினைவில் இருத்திக் கொள்ள வேண்டாம் என்று நான் சொன்னேனா? இதில் என் தவறு என்ன இருக்கிறது என்று தயவுசெய்து சொல்லுங்கள்.

''நீங்கள் நேரில் வந்ததற்கும், கனவில் கூறியதைத்தான் சொன்னேன். நான் சொன்னபடியே அன்று காலை ஒரு நாட்டு இளவரசன் வந்தால் அவனை இடைப் பையன் என்றும், அவன் இவன் என்றும் கூறி அவனைக் கேவலப் படுத்திச் சிறையில் அடைத்து வைத்தீர்கள். இளவரசன் என்றால் எப்பொழுதும் முடி தரித்து, அலங்கார உடை தரித்து இருக்க வேண்டும் என்று உண்டா? சாதாரண இடைச் சிறுவன் உருவத்திலிருந்தால், இளவரசனாக இருக்க முடியாது என்று உண்டா? எதுவும் தீர விசாரித்து ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று உங்களுக்குத் தெரியவில்லை என்றால் அது என் குற்றமா?......''

இவ்விதம் மந்திரவாதி கூறிக் கொண்டிருந்த போது அந்தச் சபையில் பெரிய சலசலப்பு ஏற்பட்டது.

மந்திரவாதி கூறிக் கொண்டே யிருந்தான்: ''ஆனால் கடைசியாக நான் செய்தது குற்றமே. அது அளவு கடந்த வாஞ்சையின் காரணமாக ஏற்பட்டது. ஆம், நந்தகுமாரனுக்கு மந்திர சக்தியைக் கற்றுக் கொடுத்துத் தப்பி ஓடச் செய்ததைப் பற்றித்தான் கூறுகிறேன். ஆனால் அவன் திரும்பி வராமல் இருந்துவிடப் போவதில்லை. அவன் மீது குற்றமில்லாத போது அப்படித் தப்பியோட அவனுக்கு அவசியமில்லை. அவன் நல்ல வீரன்; ராஜ குடும்பத்தில் பிறந்தவன் அவன் வருவான்...''

அந்தச் சமயம் ''வந்தே விட்டேன், குருவே!'' என்று ஒரு குரல் கேட்டது.

யாவரும் திரும்பிப் பார்த்தனர். நந்தகுமாரன் வந்துகொண் டிருந்தான். அவன் கைகளில் விலங்கு பூட்டி யிருந்தது. அவன் பக்கத்தில் சங்கீத வித்வான் வீட்டில் வேலைக்காரியாக இருந்த பெண் வந்து கொண்டிருந்தாள். ஒற்றர்களும் சேனை வீரர்களும் இவர்களைப் புடைசூழ வந்தனர். இவர்களைத் திரும்பிப் பார்த்த மந்திரவாதி, ''ஆ! என் பிரபா! வந்து விட்டாயா, அம்மா!'' என்றான்.

''தாத்தா!'' என்றாள் வேலைக்காரியாக இருந்த பிரபா! அப்பொழுது அவள் கண்களில் பொல பொலவென்று கண்ணீர் வந்து விட்டது. மந்திரவாதியின் கண்களிலும் கண்ணீர் வந்து விட்டது!

இதுகாறும் கம்பீரமான குரலில் பேசி வந்த மந்திரவாதியின் குரல் கரகரத்தது. தொண்டையில் துக்கம் வந்து அடைத்தது! திக்கித் திணறிக் கண்களில் கண்ணீர் வழியக் கூறலானான்:

''ஐயா, நான் குற்றவாளியல்லவென்று சொன்னேன். தவறு, தவறு! என்னைப் போன்ற மாபெரும் குற்றவாளியை நீங்கள் பார்த்தே இருக்க முடியாது! எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடுங்கள். எவ்வளவு கடுமையான தண்டனை விதித்தாலும், என் பாவம் தொலையாது; என் பழி தீராது! ஏனெனில் அவ்வளவு பெரும் பாதகம் செய்து விட்டேன்; அவ்வளவு பெரிய பாவம் செய்திருக்கிறேன்......''

எல்லோரும் திக்பிரமை பிடித்து ஒன்றும் புரியாமல் உட்கார்ந்திருந்தனர். துயரம் தாங்க மாட்டாமல் தொண்டை அடைக்கவே, சற்று ஓய்வு எடுத்துக் கொண்டான்.

''இதோ, இந்தப் பெண்......இல்லை......இளவரசி பிரபா; ஆம், ராஜகுமாரிதான் இவள்! புஷ்பக நாட்டு இளவரசியான பிரபாவைச் சின்னஞ் சிறு பருவத்தில் ஏமாற்றி அழைத்து வந்து நான் வளர்த்தேன். அரச போகத்தில் வாழ வேண்டிய பிரபாவை, இந்த ஏழையின் குடிசையில் பல ஆண்டுகள் வசிக்கும்படியும் பல கஷ்டங்களை அநுபவிக்கும்படியும் செய்து விட்டேன். பிரபா பட்ட கஷ்டங்களை நினைத்தால் எனக்கு இவ்வுலகில் யாருமே கடும் தண்டனை விதிக்க முடியாது என்று தோன்றுகிறது!''

''என்ன! இந்தப் பெண் இளவரசியா? ராஜகுமாரியா?'' என்று அந்தச் சபையினர் எல்லோரும் ஆச்சரியத்துடன் கேட்டனர். கண்கள் அகலமாக விரிந்தன! திறந்த வாய் மூடவில்லை!

''ஆம், பிரபா, புஷ்பக நாட்டு இளவரசி. சிறு பிராயத்தில் இவள் அரண்மனை நந்தவனத்தில் விளையாடிக் கொண்டிருந்த போது, அபகரித்துக் கொண்டு வந்து விட்டேன்! ஏமாற்றி அழைத்து வந்து விட்டேன்! உங்களால் எவ்வளவு கடும் தண்டனை கொடுக்க முடியுமோ கொடுங்கள்!'' என்று பலத்த குரலில் கூறினான் மந்திரவாதி.

(தொடரும்)




" கல்கி "யில்

ஸ்ரீ வி. என் குமாரசாமி எழுதிய

# ஆரோக்கிய ரகசியம்

எனும் யோகாசன ஆரய்ச்சிக் கட்டுரைகள்
நூலாக வெளிவந்து விட்டது

○★○

உயர்ந்த பதிப்பு இரண்டு பாகங்கள்
விலை ரூ. 10-0-0

சாதாரண பதிப்பு இரண்டு பாகங்கள்
விலை ரூ. 6-0-0

சாதாரண பதிப்பு முதல் பாகம்
விலை ரூ. 3-8-0

சாதாரண பதிப்பு இரண்டாம் பாகம்
விலை ரூ. 3-8-0

ஆசனம் செய்யும் முறை
சுருக்கமான பதிப்பு விலை ரூ. 3-0-0

தபால் செலவு தனி
புத்தக வியாபாரிகளுக்குத் தக்க கமிஷன் உண்டு.

மானேஜர்

## ஆரோக்கிய யோகாஸ்ரமம்

216, திருவொற்றியூர் ஹைரோடு
தண்டையார்ப்பேட்டை — சென்னை-21

---

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ் : 9, செம்புதாஸ தெரு, மதராஸ்-1

போன்: 55556 | தபால் பெட்டி நெ. 1395 | தந்தி: KALLIFUNDS

## எங்கள் நவம்பர் மாத சீட்டு வரிசை

பிற்காலத்திற்குச் சேராக சேமியுங்கள்

30 மாதங்கள் — 30 சந்தாதாரர்கள்

3 - வது ஞாயிறு ஏலங்கள்

சந்தா செலுத்த கடைசி தேதி 14-11-53
முதல் ஏலத் தேதி 15-11-53

உடனே விண்ணப்பியுங்கள்

1. நீங்கள் எங்கிருந்தும் சந்தாதாரர் ஆகலாம்.
2. தபால் அல்லது வேறு யார் மூலமோ ஏலம் கேட்கலாம்.
3. சேமிப்பாகக் கருதுகிறவர்களுக்கு குறைந்தபட்ச வட்டி உத்திரவாதம் செய்யப்படுகிறது.

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| C | 100 | 3000 |
| D | 50 | 1500 |
| E | 25 | 750 |
| F | 20 | 600 |
| G | 15 | 450 |
| H | 10 | 300 |

எமது விதிகளும் நிபந்தனைகளும் கோரிக்கையின் பேரில் தெளிவான விலாசங்களுக்கு அனுப்பப்படும்.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்.

# சகோதரி மீனா

### கி. ரங்கராஜன்

கல்லூரிக்குப் போய் விட்டுச் சாயங்காலமாக அலுத்துச் சலித்து வீட்டுக்கு வரும் சமயம் பார்த்துத்தான் மீனா ஏதாவது ஒரு கணக்கைத் தூக்கிக்கொண்டு வந்து, "இதை எப்படி அண்ணா போடுகிறது?" என்று கேட்பாள். கோபுவுக்கு ஆத்திரம் வரும். "போ, இங்கிருந்து போய்விடு. நீயும் உன் கணக்கும்! எல்லாம் உன் வாத்தியாரையே கேட்டுக் கொள். எனக்கு ஒன்றும் தெரியாது இங்கிருந்து தள்ளிப் போ" என்று சீறுவான்.

அவன் உதடுகளிலிருந்து சீறி வெடித்து வெளி வரும் வார்த்தைகள், மீனாவை வேதனையில் ஆழ்த்தும். இருந்தாலும் அந்தப் பெண் பொறுமையாக "நாளைக்காவது போட்டுக் கொடேன், அண்ணா" என்று சொல்லி அப்போது நகர்ந்து கொள்வாள்.

கோபுவுக்கு மீனா எட்டு வயது சிறியவள். ஒன்பது வருஷங்களுக்கு முன் அவர்கள் தகப்பனார், ராமஸ்வாமி ஐயர் ருக்மிணியை இரண்டாம் தாரமாக விவாகம் செய்து கொண்டார். அப்போது கோபு எட்டு வயது நிரம்பிய சிறுவனாக இருந்தான்.

முதல் மனைவி இறந்த புதிசில், மறு விவாகம் வேண்டாம் என்று தானிருந்தார். ஆனால் அவருடைய உறவினரும், நண்பர்களும் அவரை வற்புறுத்தவே ருக்மிணியை இரண்டாவது மனைவியாக ஏற்றுக் கொண்டார். அடுத்த வருஷம் மீனா பிறந்தாள். கோபுவுக்கு அப்போது ஒன்பது வயது. வாழ்க்கை அநுபவம் உடலில் ஏறப்பெறாத பருவம். ஆனால் அந்தப் பருவத்தில், அவன் நெஞ்சின் அடித் தளத்தில் ருக்மிணியையும் அவள் வயிற்றில் பிறந்த மீனாவையும் யாரோ எங்கிருந்தோ வந்த வேற்று மனிதராக நினைக்க முடிந்ததன்றித் தன்னைக் காக்க வந்த ஒரு புதிய தாயாகவும், தனக்கு உற்ற துணையாக வந்த சகோதரியாகவும் அவனால் சிறிதளவும் நினைக்க முடியவில்லை.

இவ்வளவுக்கும், ருக்மிணி கோபுவிடம் ஒட்டிக் கொண்டுதா னிருந்தாள். மூத்தாள் பிள்ளை என்று கருதி ஒதுக்கித் தள்ளாமல், பத்து மாசம் சுமந்து பெற்ற சொந்த மகனாகவே நினைத்தாள். மீனாவுக்கு ரிப்பனோ, வளையலோ எது வாங்கினாலும், கூடவே கோபுவுக்கும் ஏதாவது வாங்குவாள். மீனாவுக்கும் தன் அண்ணாவிடம் கொள்ளை ஆசை. தனியே இலையில் உட்கார்ந்து சாப்பிடாமல், எவ்வளவு நாழிகை ஆனாலும் காத்திருந்து, தன் அண்ணனுடன் உட்கார்ந்து சாப்பிட்டால்தான் அவளுக்கு வயிறு நிரம்பும்.

இப்படி அவர்கள் தாயும் மகளுமாகப் போட்டி போட்டுக் கொண்டு தன்னிடம் அன்பு காட்டுவதை, கோபுவினால் அறிந்து கொள்ள முடியவில்லை. தன் தகப்பனாரின் அரை வயிற்றுச் சோற்றை ஆளுக்கு ஒரு பங்காகப் பிரித்து எடுத்துக் கொண்டு போக வந்த வேற்று மனிதர்களாகவே கருதினான். கோபுவுக்கு வயது ஏற ஏற கூடவே அவன் உள்ளத்தில் காரணமில்லாமல் வெறுப்பும் குரோதமும் வளர்ந்து கொண்டே வந்தது.

அவனுக்குக் கல்லூரிப் படிப்பு முடிந்தது. மேலே வக்கீலுக்குப் படிக்க வைக்க வேண்டுமென்று அவன் தகப்பனார் விரும்பினார். ருக்மிணிக்கும் அதுதான் எண்ணம். ஆனால் கோபுவுக்கு அதில் பிரியமில்லை. ஏதாவது ஒரு உத்தியோகத்தைப் பற்றிக் கொண்டு எங்கேயாவது கண் காணாத தேசமாகப் போய்விட வேண்டும் என்று விரும்பினான். கல்கத்தாவில் ஏதோ ஒரு பாங்கியில் வேலை ஒன்று காலி இருப்பதைப் பத்திரிகை மூலம் அறிந்ததும், அதற்கு மனுச் செய்தான். அவன் அதிர்ஷ்டம் அடுத்த வாரமே அவனுக்கு அந்த வேலை கிடைத்தது.

தகப்பனாரை விட்டுப் பிரிகிறோம் என்ற நினைவில் பிறந்த வருத்தம் ஒருபுறம் இருந்தாலும், சித்தியையும் சித்தி பெண்ணையும் விட்டு எட்டப் போவதில் அவன் மகிழ்ச்சிதான் அடைந்தான். தகப்பனார் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை; கோபாலன் கல்கத்தாவுக்குப் புறப்பட்டு விட்டான்.

கல்கத்தாவுக்கு வந்த புதிசில், அவனுக்கு அங்கே எல்லாம் புதுமையாகவும் விந்தை தருவனவாகவும் இருந்தன. மாசத்தில் ஒரு முறை தகப்பனாரிடமிருந்தும், மூன்று முறை தங்கை மீனாவிடமிருந்தும் கோபுவுக்குக் கடிதங்கள் வரும். அவற்றில் தங்கையினிடமிருந்து வரும் கடிதங்கள்தாம் சற்று நீண்டதாக இருக்கும். நாலு வரிகளில் மூன்று இடங்களில் "அண்ணா, அண்ணா" என்ற பதங்கள் காணப்படும். அந்தக் கடிதங்களைப் பார்க்கும்போது எந்த அண்ணனுக்கும் கண் கலங்கத்தான் செய்யும். ஆனால் கோபுவின் உள்ளத்தில் அத்தகைய உணர்ச்சியை, அந்தக் கடிதங்கள் உண்டாக்க முடியவில்லை. அத்துடன் அவற்றிற்கு ஒன்றுக்காவது அவன் பதில் எழுதியது கிடையாது.

மனம் விட்டுப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் இல்லாத அந்தத் தொலை நகரில், அங்கே ஒரு மதராஸ்கார நண்பன் கிடைத்ததில் கோபுவுக்கு அளவில்லாத மகிழ்ச்சி.

ஆபீஸ் அறையில் நேருக்கு நேராக உட்கார்ந்து கொண்டு நேரம் போவது தெரியாமல் கோபாலனும் சிவராமனும், மணிக் கணக்காகப் பேசிக் கொண்டிருப்பார்கள்.

அப்படி அவர்கள் பேசிக் கொண்டிருந்த சமயங்களில் ஒரு நாள் இரவு வெகு நேரமாகி விட்டதால், "ஏன் கோபு, இனி மேலா நீ ஹோட்டலுக்குப் போவாய்? இன்று என்னோடு என் வீட்டுக்கு வந்துவிடு, அங்கேயே சாப்பிடலாம்" என்றான் சிவராமன். கோபு அவன் அழைப்புக்கு இணங்கி அவனுடன்

அவன் வீட்டுக்குச் சென்றான். கூடத்தில் ஒரு பெண்—பதினேழு பதினெட்டு வயதிருக்கும்—ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தவள், அவர்களைக் கண்டவுடன் சரேலென எழுந்து உள்ளே வேகமாகப்போனாள். போகும்போது கோபுவை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டுத்தான் போனாள். கோபுவும் பார்த்தான். அவள் மதிவதனமும் அந்த மதி வதனத்தில் மீனென மிளிரும் இரு கண்களும், தாம்பூலம் படிந்து சிறிது செங்காவி ஏறி இருந்த அந்த அழகிய உதடுகளும், கோபுவை ஒரு நிமிஷம் என்னமோ செய்தன. 'சட்'டென்று பார்வையைத் திருப்பி நண்பனைப் பார்த்தான்.

"இவள் என் தங்கை வனிதா. 'வனி, வனி' என்று செல்லமாய்க் கூப்பிடுவேன். இவளும் நானுந்தான் இருக்கிறோம். துணைக்குத் தாய் வழியில் ஒரு பாட்டி இருக்கிறாள். தகுந்த பையனாகப் பார்த்து இவளை ஒருவனுக்குக் கொடுத்து விட்டால், வாழ்க்கையில் எனக்குள்ள ஒரு பெரிய பொறுப்பு நீங்கிவிடும். செல்லமாக வளர்ந்தவள். அதனால் அவள் தனக்கு மதனி வந்து பார்த்துவிட்டுத்தான், தனக்கு விவாகம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள்" என்றான் சிவராமன்.

கோபு பதில் சொல்லவில்லை.

சில நிமிஷங்களில் கூடத்தில் இருவருக்கும் உணவு பரிமாறப் பட்டது. வனிதாதான் பரிமாறினாள். அவள் கூந்தலின் அழகு கோபுவை நிலைகுலையச் செய்தது. கூந்தலைப் படியப்படிய வாரி, நடு மத்திக்குக் கொஞ்சம் இடதுபுறம் தள்ளி வகிடு எடுத்துப் பின்னிப் பிச்சோடாப் போட்டிருந்தாள். அதினின்றும் பிறந்து வெளி வந்த பூவின் நறுமணம் கோபுவின் நாசியில் தாக்கி அவனை இன்பலாகிரியில் ஒரு கணம் ஆழ்த்திற்று.

"எங்களுடைய தாய் தந்தையர் காலமான பிறகு வனிதாதான் குடும்ப பாரத்தை ஏற்று நடத்துகிறாள். அவள் எனக்குத் தங்கை மாத்திரம் அல்ல, தாயாகவும் தந்தையாகவும் இருக்கிறாள். 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்' என்று படித்திருப்பாயே, அப்படித்தான் வனிதா இருக்கிறாள். ஒருநாள் நேரம் கழித்து நான் வீட்டுக்கு வந்தால் வனிதா பதறிப் போய்விடுவாள். நான் வரும் வழியையே பார்த்து என்னைக் கவலையோடு எதிர் பார்த்துக் கொண்டிருப்பாள். அவளுடைய சகோதர அன்புக்கும் ஆசைக்குமாக இந்த உலகில் ஈடுகாட்டப் பொருளே கிடையாது. அப்படிப்பட்டவள் என்னோடு எத்தனை நாளைக்கு இருக்க முடியும்? என்றைக்காவது பிரியத்தானே வேண்டும். அதை நினைக்கும்போதுதான் ..." மேலே சிவராமன் பேச முடியாமல் தவித்தான்.

கோபுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. தன் சகோதரியைப் பற்றிப் பேசும்போது அவன் உணர்ச்சி வசப்பட்டுப் போவதையும், அவன் கண்களில் நீர் சுரப்பதையும் கவனித்தான்.

ராமாயணத்தில், ராமபிரான் லக்ஷ்மணனைச் சிறிது நேரம் காணாமையால் துடிதுடித்



னுப் போய்ப் பலவாறு வருந்தியதாகப் படித்திருக்கிறான். அப்படி யல்லவா இருக்கிறது இந்தச் சிவராமனுடைய சகோதரி அன்பும் என்று வியந்தான்.

கோபு தாயின் அன்பிலும், சகோதரி அன்பிலும் வளராதவன். ஆதலால் அவனுக்கு நண்பனுடைய மெய்ப்பாடு புதுமையாகவே இருந்தது. அவனுடைய பழக்க விசேஷத்தால், கோபுவின் உள்ளத்திலும் ஒரு கிளர்ச்சி படர ஆரம்பித்தது.

பல வருஷங்களாகப் பாராத அவனுடைய சிற்றன்னையும், சகோதரி மீனுவும் அவன் மன அரங்கில் தோன்றினர். அன்றுவரை இருவரும் அவர்கள் அவனிடம் காட்டிய அன்பு எவ்வளவு பவித்திரமானது, எவ்வளவு ஆந்தரிகமானது, எவ்வளவு ஆழமானது! அந்த அன்பினுடைய சக்தியை அந்தக் காலங்களில் அவன் அறிந்து கொள்ளவில்லை. அறிந்து கொள்ள முடியவும் இல்லை. முதன் முதலாக இப்போதுதான் உணருகிறான், நினைக்கிறான். நினைத்து ஏங்கவும் தலைப்படுகிறான். ஒரு முறை ஊருக்குப் போய் அவர்களையெல்லாம் பார்க்க வேண்டும்போல் இருந்தது அவனுக்கு. அதற்கேற்ற சந்தர்ப்பமும் விரைவில் அவனுக்கு வாய்த்தது.

அன்று அவனுக்கு அவன் தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

பல நாட்களாகப் பாராமல் இருந்த அவன் முகத்தை அவனுடைய சித்தியும் தங்கையும் பார்க்கப் பெரிதும் விரும்புவதாகவும், அத்துடன் அவன் தங்கை மீனுவுக்கு ஒரு தகுந்த இடத்தில் வரன் பார்த்திருப்பதாயும், வரதட்சிணை முதலான செலவுகளுக்குக் குறைந்த பட்சம் நாலாயிரம் ரூபாயாவது வேண்டும் என்றும், தற்போது அவரிடம் அவ்வளவுக்கு வழி இல்லாததால், அவனிடம் அவர் ஏதாவது எதிர் பார்க்கக் கூடுமா என்றும் கேட்டு எழுதியிருந்தார்.

தந்தையின் கடிதத்தைப் படித்த கோபுவுக்கு அழுகையே வந்துவிட்டது. எத்தனை கணக்காக எழுதியிருக்கிறார், நாலாயிரம் ரூபாய் வேண்டும் என்று.

அவன் வேலை பார்த்து வந்த அந்த பாங்கியிலேயே அதுகாறும் நாலாயிரம் ரூபாய் வரைக்கும் அவன் சேமித்து வைத்திருந்தான். தன்னுடைய எதிர்கால வாழ்வுக்குப் பிரயோஜனப்படட்டும் என்ற நினைவில்தான் அப்பொருளை அவன் சேமித்தது. அந்தப் பணம் தன் தங்கையின் விவாகத்துக்கு வேண்டியிருக்கும் என்று அவன் கருதியிருக்கவில்லை. இப்போது அப்படி ஒரு சந்தர்ப்பம் வாய்த்ததில் அவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். அன்றே நாலாயிரம் ரூபாய்க்கு, தகப்பனார் விலாசத்துக்கு 'இன்ஷூர்' செய்து அனுப்பி விட்டுக் கூட ஒரு தந்தியும், "இரண்டு தினங்களில் தங்களையெல்லாம் காண அங்கே வருகிறேன்" என்றும் அனுப்பி விட்டான்.

சிவராமனுக்குத் தன் நண்பன் பாங்கியில் பணம் போட்டிருப்பது தெரியும். அந்தப் பணத்தையும் அவன் உத்தியோகத்தையும் நம்பி அவனுக்குத் தங்கையை விவாகம் செய்து, கொடுத்து விடலாம் என்று கருதினான். எதிர்பாராதபடி திடீரென்று அவ்வளவு பணத்தையும் அவன் தன் தகப்பனருக்கு அனுப்பி விட்டதில், சிவராமனுக்கு அவனிடமிருந்த பிடிப்பு சற்றுத் தளர்ந்து விட்டது.

கோபு இரண்டு மாதம் லீவு போட்டு விட்டு ஊருக்குப் புறப்பட்டு விட்டான்.

அவனைப் பார்த்ததில் எல்லாரைக் காட்டிலும் மீனுவுக்குத்தான் அதிக சந்தோஷம். ஆஜானுபாகுவாய் வளர்ந்து, சட்டையும் கால் சட்டையுமாக அவனைப் பார்க்கும் போது மீனுவுக்கு ஆச்சரியமும் சந்தோஷமும் தாங்கவில்லை. "என்ன அண்ணா எங்களையெல்லாம் நீ மறந்துதானே போய் விட்டாய்? என் கடிதங்கள் ஒன்றுக்காவது

**பொன் குஞ்சு!**



என் அண்ணா நீ பதிலே போடவில்லை?'' என்று கேள்வி மேல் கேள்வி கேட்டாள் மீனா. கோபு திண்டாடிப் போனான். இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் பார்த்த மீனா வாகவா இருக்கிறாள்? ஏ, அப்பா! எவ்வளவு நன்றாக வளர்ந்திருக்கிறாள்!

இவள் அழகுக்கும், கொஞ்சும் மொழிகளுக்கும் ஏற்ற கணவனாக யாரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார் அப்பா என்று அறிய விரும்பினவனாய் "அப்பா, நம் மீனாவுக்கு எங்கே வரன் பார்த்திருக்கிறீர்கள்?" என்றான்.

"பையனுக்குப் பெற்றோர் இல்லையாம். ஒரே தங்கையாம். இத்தனை நாள் வரைக்கும் ஜபல்பூரில் இருந்தானும், இப்பொழுது கல்கத்தாவுக்கு மாற்றி விட்டார்களோ, மாற்றப் போகிறார்களோ தெரியவில்லை என்று சொன்னார்கள்'' என்றார் தகப்பனார்.

"என்ன வேலை என்று சொன்னார்கள்?''

"ஏதோ ஒரு பாங்கியில் வேலையாம்.''

"பையன் பெயர்?''

"சிவராமன்.''

"சிவராமனா? என்ன அப்பா இது, ஆச்சரியமாக இருக்கிறதே. எனக்கு அவனை நன்றாகத் தெரியுமே. அவனும் நானும் அதே பாங்கியில்தானே இருக்கிறோம். கல்கத்தாவுக்கு அவன் வந்து எவ்வளவு நாள் ஆகிறது! 'பஸ்ட்கிளாஸ்' வரன் அப்பா, அவன். என்னிடம் தனக்கு விவாகம் ஆகப் போவதாகச் சொல்ல வில்லையே'' என்றான் கோபு.

"ராமசாமி ஐயருக்கும் ஆச்சரியமாக இருந்தது. போகிறது, உனக்குத் தெரிந்த வரனாக இருப்பதில் திருப்திதான்'' என்றார்.

"திருப்தியாவது பேஷான வரன் அப்பா. மீனாவுக்கு அதிர்ஷ்டம் என்று சொல்லுங்கள். அவன் அழகுக்கும், குணத்துக்கும் நாலாயிரம் ரூபாய் என்ன எட்டாயிரம் கூடச் செலவு செய்யலாம்'' என்றான் கோபு.

"ஏ அப்பா உன் சிபார்சு ரொம்ப பலமாக இருக்கிறதே'' என்றார் தகப்பனார்.

* * *

அன்றைய ரயிலில் கோபு தன் நண்பன் சிவராமனுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதி, அதில் தன்னுடைய அன்பையும் மகிழ்ச்சியையும் வெளியிட்டிருந்தான்.

பெரியோர்களால் நிச்சயிக்கப் பட்டபடி ஆவணி முதல் முகூர்த்தத்தில் சிரஞ்சீவி சிவராமனுக்கும் சௌபாக்யவதி மீனாட்சிக்கும் விவாகம் நடப்பதாக இருந்தது. அந்த தினத்தில் அந்த விவாகம் நடைபெற வேண்டுமானால் இன்னும் ஒரே ஒரு நிபந்தனை இருக்கிறதென்றும், அதைத் தான் நேரில் வந்து தெரிவிப்பதாகவும், அது பூர்த்தியான பிறகுதான், தனக்கு விவாகம் என்றும் சிவராமன் எழுதியிருந்தான்.

என்ன நிபந்தனை இருக்கப் போகிறது என்று தகப்பனாரும் மகனும் நினைத்து மூளையைக் குழப்பிக் கொண்டார்கள். அவர்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

அடுத்த வாரம் நண்பன் வந்தான்.

"என்ன அப்பா இது. என்னமோ நிபந்தனை நிபந்தனை என்றெல்லாம் எழுதி எங்களைப் பயமுறுத்தி இருக்கிறாய்? இன்னும் ஆயிரம் இரண்டாயிரம் என்று ஏதாவது கேட்கப் போகிறாயோ?'' என்றான் கோபு.

"என்னைப் பரிகாசம் செய்வது இருக்கட்டும். ஆரம்பத்தில் நான் நினைத்தது ஒன்று. என் தங்கைக்கு விவாகம் செய்து விட்டுத்தான் நான் விவாகம் செய்து கொள்ளுவதாக இருந்தேன். ஆனால் அவளுக்கு வரதட்சிணை கொடுப்பதற்கு வேண்டிய வசதி என்னிடம் இல்லாமையால் முதலில் என் விவாகத்தில் வரும் பணத்தைக்கொண்டு அவளுக்குப் பிறகு மணம் செய்விக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் இப்போது எனக்கு வர இருக்கும் மனைவி உன் தங்கையாக இருப்பதால், உன்னிடமா நான் வரதட்சிணை வாங்குவது'' என்று யோசிக்கிறேன்.

"சரி! ரொம்ப சந்தோஷம். எங்களுக்கு ரூபாய் மிச்சமாகட்டும்; சரிதானே?''

"சரிதானாவது? என் தங்கைக்கு விவாகம் ஆகவேண்டுமே?''

"யார் வேண்டாம் என்றார்கள்? பேஷாக ஆகட்டுமே மாப்பிள்ளை யார்? சொல்.''

"யாரா யிருக்கும்?''

"எனக்கு என்னப்பா தெரியும்?''

"ஐயோ பாவம், உனக்கு ஒன்றும் தெரியாது-சாட்சாத் கோபாலன் அவர்கள் தான்.''

"கோபாலனா! அடே அப்பா எனக்கா கல்யாணம்? வனிதாவா என் மனைவி? விளையாடுகிறாயா சிவராம்?''

"விளையாட்டே அல்ல; உண்மையாகத் தான் சொல்லுகிறேன்.''

"அப்போது, வரதட்சிணைக்கு வழி? அதை நீ எப்படியும் கொடுத்துத்தான் ஆகவேண்டும். வரதட்சிணை இல்லாத விவாகம், என்ன விவாகத்தோடு சேர்த்தது?''

"அவசியம் கொடுக்கிறேன். உன்னிடமிருந்து பெறப்போகும் வரதட்சிணையை உனக்கே திருப்பிக் கொடுத்து விடுகிறேன். சம்மதம்தானே?''

"சிவராம். நான் சொல்வதைக் கேள். தாய் அன்பு, சகோதரி அன்பு என்ன என்பதை அறியாத என் உள்ளத்தில் அந்த இரண்டு பெரிய அன்புகளையும் படரச் செய்து வளர்த்துவிட்ட, பரமோபகாரியான உனக்கு நான் என்ன செய்தாலும் அது கைம்மாறு ஆகாது. அப்படி இருக்க, கரும்பு தின்னக் கூலி வாங்குவதுபோல், உன்னிடமா நான் வரதட்சிணை வாங்கவேண்டும்! அப்படியெல்லாம் பேசி என் மனத்தை வருத்தாதே'' என்று சொல்லி அவன் இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டான்.

அப்போது அந்த இரண்டு நண்பர்கள் கண்களினின்றும் நீர் சுரந்தன. அப்படிச் சுரந்த அந்த அன்பு வெள்ளத்தை ஒருவர் அறியாமல் மற்றவர் மறைத்துக் கொண்டனர்.



# சோஷலிஸம் ஏன் வேண்டும் ?

எஸ். ராமசுப்பிரமணியம்

சோஷலிஸம் என்பதன் முக்கியத்துவத்தை உணர, அதனால் குறிக்கப்படுவது ஒரு பொருளாதார சித்தாந்தம் மட்டுமல்லாது, ஒரு வாழ்க்கை நெறி என உணர வேண்டும். மனித சரித்திரப் போக்கிலே காணப்படும் பலவகை வாழ்க்கை முறைகளிலே நிலப்பிரபுவும், அடிமையும் சேர்ந்து வாழ்ந்த சமுதாயத்தை அடுத்து வந்தது, தொழிலாளியையும் முதலாளியையும் கொண்ட முதலாளித்துவ சமுதாயம். அதுவே இன்று பரவி வேரூன்றி நிற்பதும் மாற்றப்பட வேண்டியதுமாகும். மேற்சொன்ன நிலப் பிரபுத்துவ சமுதாயத்தின் மாற்றத்துக்கு அடிப்படையான காரணம் ஆக இருந்தது இயந்திரப் புரட்சி.

அடிமையும் பிரபுவும் ஓர்விதமான அமைதியுடன் வாழ்ந்து வந்த சமூகத்தை உடைத்து, நகரத்தையும் நகர நாகரிகத்தையும் நிர்மாணித்தது இயந்திரப் புரட்சி. அதற்கு முன் செல்வம் உற்பத்தியாவதற்கு ஒரே ஒரு முறைதான் இருந்தது. அதுதான் விவசாயம். இப்பொழுது புதிதாக வேறு ஒரு முறை கண்டு பிடிக்கப் பட்டது. அதுவே தொழிலியல்.

சற்றுப் பின் சென்று நிலப் பிரபுத்துவ முறை எப்படி உண்டாயிற்று என்பதை ஆராய வேண்டுவது அவசியம். விவசாயம் உயிர் வாழ் முறையாகக் கைக்கொள்ளப்பட்ட காலத்திலே வேண்டிய நிலமும் குறைந்த ஜனத்தொகையும் இருந்தபடியால் ஒவ்வொருவனுக்குப் போதுமான நிலம் இருந்தது. காலம் செல்லச் செல்ல ஒருவன் மற்றவனது நிலத்தைக் கைக்கொண்டு அவனைத் தன் கீழ் ஆக்கிக் கொண்டான். இதற்காக அனுஷ்டிக்கப்பட்ட முறைகள் யாவுமே நீதியானவை நேர்மையானவை என்று கூற முடியாது. இவ்வாறாகவே, சுரண்டலின் அடிப்படையிலேயே, அடிமை—பிரபு சமுதாயம் உருவாகியது. இந்த நிலை முற்றி இந்த அமைப்பு உடைந்து விடும் நிலையில் அந்தப் பிரச்னையின்மேல் கருத்துச் செல்லாமல் தடுத்துவிட்டுப் புதியதாக இயந்திரப் புரட்சி உருவாகியது. இது ஒரு புதிய முதலாளித்துவ பிரபுக்கள் குழுவை உருவாக்கியது.

எப்படி யெனில் !

இயந்திரப் புரட்சி இயந்திரங்களை உருவாக்கிக் கொடுத்திருந்தது. அவற்றை உடைமையாக்கிக் கொள்ள மூலதனம் தேவையாக விருந்தது. அந்த நேரத்திலே எவனிடம் முதல் இருந்ததோ அவன் இதை உபயோகப்படுத்தி உற்பத்திக் கருவியை உடைமையாக்கிக் கொண்டான். இவ்வாறு ஒரு புதிய குழுவும் ஒரு புதிய வாழ்க்கை முறையும் உருவாயின. பெருவாரியான மக்களின் தேவைகள் இந்த முறையில் பூர்த்தி செய்யப்படும் என்ற நம்பிக்கையும் எழுந்தது.

இந்தப் பின்னணியிலே இந்தியாவைப் பற்றிப் பேசுவோம். இந்தியாவில் நிலப்பிரபுத்துவ முறையின் முற்போக்கு எதிரிகளாக விருந்த அரசுகளை ஒழித்துவிட்டு ஆங்கிலேயர் தங்கள் ஆட்சியுடன் கூட முதலாளித்துவ முறையையும் வேரூன்றினார்கள். ஆனால் சுயநலத்தைக் கொண்டு அவர்கள் இயந்திரங்களை இங்கு அமைக்காததால், பச்சையான முதலாளித்துவம் இந்தியாவில் வேரூன்றத் தொடங்கியது, சென்ற நூற்றாண்டின் பிற்காலத்திலேதான். இது ஒருவிதத்திலே நன்மை. ஒரு விதத்திலே தீமையுங்கூட. முதலாளித்துவ முறை வேரூன்றி விடவில்லை என்பது நன்மை. அதன் தீய போக்கின் பூரண வலிமையையும் மக்கள் உணர வாய்ப்பில்லை என்பது ஒரு விதத்தில் தீமையே.

** ** **

முதலாளித்துவம், கம்யூனிஸம், சோஷலிஸம் இவற்றின் அடிப்படையாகவுள்ள தத்துவங்களை ஒவ்வொரு வாக்கியத்திலே சொல்லுங்கள் என்று கேட்டால், இவற்றைப் பூரணமாக அறிந்தவர்கள் கீழ்க்கண்டவாறுதான் கூறுவார்கள். முதலாளித்துவத்தில் எல்லாம் "அவனவன் பாடு" தான். கம்யூனிஸம் "அரசாங்கமே எல்லாம்" என்று கூறிச் செயல் புரிகிறது. சோஷலிஸம் லட்சியங்களில் கம்யூனிஸத்துடன் ஒருமைப்பாடு கொண்டிருந்த போதிலும், முக்கியமானதாகிய செயல் முறையில் அதனின்று வேறுபட்டு "மக்களே எல்லாம்" எனக் கூறுகிறது. அதாவது ஜனநாயக அரசியல் முறையை முழுமையும் ஒப்புக் கொள்ளுகிறது. கம்யூனிஸத்துக்கும் சோஷலிஸத்துக்கும் இடையிலே உள்ள இந்த அடிப்படை வேறுபாட்டை அழுத்தி அழுத்திக் காட்டி, ஒன்று மக்கள் கூட்டுச் சாதனையிலே நம்பிக்கை கொண்டுள்ளது என்பதையும், மற்றது மக்களுக்கு மேல் சுமத்தப்படும் யதேச்சாதிகாரமே செயல் புரிய வல்லது என்று நம்புகிறது என்பதையும்



வலியுறுத்துவது இன்றைய அரசியல் நிலையில்; நாட்டின் தற்கால சூழ்நிலையில், அவசியமாகிறது.

* * *

இயந்திரப் புரட்சி மக்களின் பொருளாதார நிலையைச் சீர்படுத்தி மேம்படுத்தும் என்ற நம்பிக்கையில் எழுந்தது எனக் குறிப்பிட்டோம். அது ஏன் நிறைவேறவில்லை! ஏன் இன்னும் கணக்கற்ற மக்கள் வறுமையில், அதனினும் கொடிய அடிமையில் மடிகிறார்கள்! இந்தக் கேள்விகளுக்கும், நிலப் பிரபுத்துவ முறையின் கீழ் பெருவாரியானவர் ஏன் துயரில் வாழ்ந்தார்கள் என்ற கேள்விக்கும் ஒரே பதில்தான் கிடைக்கிறது. உற்பத்திக் கருவிகள் தனிப்பட்டவரின் கையிலே இருந்தமையினால், உற்பத்திப் பெருக்கின் விளைவுகள் சமுதாயத்தில் நேர்மையான அளவில் பரவவில்லை என்பதே. "அவனவன் பாடு" என்னும் பொழுது மற்றவன் புழுவாய்த் துடித்துச் செத்தால்தான் இவனுக்கென்ன! பிறர் துயருறும்போது அது அவன்பாடு என்று வாளாவிருந்து விடுவது லாபகரமானதாயிற்றே! தவிரவும் தொழில் — முதல் உறவு முறையில் சுரண்டல் வளர்வது தவிர்க்க முடியாததுங்கூட. அனைவரும் ஒரே சமூகத்தின் உறுப்பினர் என்ற எண்ணமே சமூகத்தை விட்டு மறைந்து விடுகிறது அல்லவா!

இத்தகைய முதலாளித்துவ முறையைப் போற்றிக் கூறப்படும் ஓரிரு வாதங்களை இங்கு தீர்த்து விடுவது நலம். போட்டியை அடிப்படையாகக் கொண்டு இருப்பதனால் மக்கள் தங்கள் முழுத் திறமையையும் வெளிப்படுத்தி வேலை செய்வர் என்று கூறப்படுகிறது. சுயநலத்தை அடிப்படையாகக் கொண்ட எந்தப் போட்டியும் உயர்ந்த தரத்ததாக இருக்காது என்பதையும், போட்டியிலே வெற்றிபெற, தான் சிறந்து இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. பிறரைச் சிறக்காது அடித்து விட்டால் போதும் என்பதை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறோம். சாதாரணமாக முதலாளிகள் குறுகிய செலவில் நிறைய சாதித்து விடும் தகைமையினரான அறிவாளிகள் என்று கூறப்படுகிறது. டைப்பு முறையில் முதல் எவ்வாறு ஒருவனுக்கு ஏற்படுகிறது, எத்தனை பேர் அவர்களை அடையும் தனத்துக்குத் தகுதியுடையவர்களாக இருக்கிறார்கள், எத்தனை பேர் தேடிவந்த முதலைக் குறுகிய காலத்திலே பாழடித்து விடுகிறார்கள் என்பனவற்றைக் கவனித்தாலே, மேற் சொன்ன கூற்றின் வாய்மை தோற்றும்.

* * *

எங்கள் ஊரிலே ஒரு பெரிய பஞ்சாலை இருக்கிறது. அதற்குப் பஞ்சு வருவதற்கு ரயில் பாதை அமைத்துக் கொடுத்தது சமூகம். அதற்கு விசை மின்சாரம் பைகாராவி லிருந்தும், பாபநாசத்திலே இருந்தும் ஓடோடிக் கொண்டு கொடுப்பது சமூகம். உழைப்புக் கருவிகளாக, ஆண், பெண்களைத் தயாரித்துக் கொடுப்பது சமூகம். அந்த ஆலையின் தயாரிப்பும் பிரம்மாண்ட மானதுதான். ஆனால் அந்த ஆலை அதே சமூகத்துக்கு அளித்திருக்கும் பலன் இதோடு ஈடு செய்யக் கூடியதாக இல்லை. ஏன்! லாபம்தான் எங்கோ போகிறதே!

உற்பத்திச் சாதனங்கள் தனிப்பட்டவர்கள் கையிலே இருப்பதனால், சமூக சக்திகள் செயல்பட்டு உண்டாகும் உற்பத்தியின் முழுப் பலனும் சமூகத்துக்கு ஏற்படாமல்போகிறது வெளிப்படை. உற்பத்தியின் விளைவினின்று தனிப்பட்டவர் லாபத்தில் சமூகம் உரிமை கொண்டாடுவதுதான் வரிவிதிப்பின் அடிப்படை. ஆனால் வரிவிதிப்பு எத்தனை விதங்களில் ஏமாற்றப் படுகிறது என்பதும், நிகரலாபத்தைக் குறைத்துக் காட்டுவதில் திறம்பட்டவர்களாக எத்தனை பேர் கணக்கு நிபுணர் எனப் பெயர் பெறுகிறார்கள் என்பதும் தெரிந்த ரகசியங்கள். மக்களால் ஏற்பட்ட அரசாங்கத்தை எதிர்த்து, அதன் வாயில் மண் தூவ, ஏமாற்று, பொய், பித்தலாட்டம் இவையே ஆயுதம் ஆகக் கைக்கொள்ளப் பட்டால் இது முதலாளித்துவ சமுதாய முறையின் சிறப்பையா காட்டுகிறது! பொது வாழ்வின் தரத்தை உயர்த்துவதற்காகவாவது, எல்லா உற்பத்திச் சாதனங்களையும் மக்களின் பொது உடைமையாக்கும் சோஷலிஸம் கட்டாயம் வேண்டும்.

ஆனால் அதனினும் சிறந்தனவாக உள்ள காரணங்களில் இரண்டு, மூன்றை மட்டும் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடுவோம்.

ஒவ்வொரு தொழிற்சாலையும், மற்ற உற்பத்திச் சாதனமும் சமூகத்தையே நம்பி இருக்கிறது. தொடங்க, நிலைக்க, செழிக்க அனைத்துக்கும் சமூகமே காரணமாகும். சமூகத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதிலே ஈடுபடுகின்றன. பணம் பெறுகின்றன. லாபம் என்பதும் இவைகளுக்குச் சமூகத்தினின்றே கிடைக்கிறது என்பது கண்கூடு. இந்த லாபமும் எவ்வளவு சந்தர்ப்பங்களிலே நியாயமான முறையிலே ஏற்படுகிறது; எவ்வளவு சந்தர்ப்பங்களினால் போட்டி யின்மையால் ஏற்படுகிறது என்பது வேறு இருக்கிறது. ஆனால் லாபம் நியாயமான வழியில் ஏற்பட்டது என்றால் கூட அது எவ்வாறு எந்தக் காரியத்துக்குப் பயன் படுகிறது! அது தனிப்பட்ட ஒரு நபருக்கோ, அல்லது பல நபர்களுக்கோ போகிறது. அந்த நபரோ, நபர்களோ, உற்பத்திக்கு எந்த விதத்திலும் பொறுப்பாளி அல்லாதவர்களாக இருக்கலாம். இருப்பினும் லாபம் அவர்களைத் தேடி அடைகிறது. அடைந்து "பணம் பணத்தோடே" சேர்ந்து சமூகத்தினரின் ஏற்றத் தாழ்வை அதிகப் படுத்துகிறது. இதன்றி, பயன் சமூகத்தையே - அதாவது அதன் கருவியான அரசாங்கத்தையே அடைந்து பரவலான செல்வ விருத்தியை ஏற்படுத்துவதே பொதுவுடைமையின் அடிப்படை. இது ஒரு முக்கியமான காரணம் "சோஷலிஸம் ஏன் வேண்டும்!" என்பதற்கு.

மற்றொன்று ஒரு புறத்திலே உற்பத்திப் பெருக்கத்தை ஏற்படுத்தக் கூடிய செல்வம். மற்றொரு புறத்தில் மக்களின் அத்தியாவசியமான தேவைகள் கூடப் பூர்த்தியாகாமல் இருப்பது, என்ற விந்தையை முதலாளித்துவம் உண்டுபண்ணி வைத்திருக்கிறது. உதாரணத்துக்கு எந்த தேவைப்

பொருளை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். சைக்கிள்கள், மத்தியதர வகுப்பினரின் உபயோகத்துக்கு ஏராளமாகத் தேவையாக இருக்கின்றன. பல செல்வரிடத்தே பணம் குவிந்து கிடக்கிறது. "ஏன் ஒரு சைக்கிள் தொழிற்சாலை நாட்டில் உருவாக்கக் கூடாது" என்று கேளுங்கள். "வட்டி கட்டாதுங்க" என்ற பதில் கிடைக்கும். அவருக்குத் தேவை ஒரு வட்டி (12%) யாக இருக்கால், சைக்கிள் தொழிலிலே சிரமப்பட்டு கால் வட்டி (3%), அரை வட்டி (6%)தான் கிடைக்கும். "வெந்து சாகட்டுமே. நடந்து போகிறவர்கள் நடந்து போகட்டும். இல்லாவிடில் இருக்கவே இருக்கிறது நம் ஏஜன்சி. முதல்தர விதேச சைக்கிள்கள் வாங்கிக் கொள்ளட்டுமே. அதில் அவருக்குக் கிடைப்பது இரண்டு வட்டி (24%) ஆயிற்றே. இவ்வளவுக்கும் அரசாங்கம் அவர்களுக்கு வசதிகள் செய்து தருவதாக வாக்குறுதி வேறு அளிக்கும். காப்பு வரிகள் போடும். ஹைமா—ம். மீண்டும் வட்டி கட்ட வேண்டும்" என்ற பிலாக்கணம் தான்.

உற்பத்திதான் செல்வத்தின் அடிப்படை. நாடு செழிக்க உற்பத்தி பெருக்கப்பட வேண்டும். தேவைகளுக்குத் தட்டு ஏற்படாமல் உற்பத்தி பெருக வேண்டும். இதில் லாப நஷ்டக் கணக்குப் பார்ப்பது கொடுமை. பலரது வாழ்க்கைத்தரம் உயராமல் பாதிப்பதுமாகும். ஆனால் உற்பத்தி வேண்டிய துறைகளில் பெருக ஏற்கெனவே இருக்கும் உற்பத்திச் சாதனங்களும், புதிதாகத் தொழில் தொடங்கக் கூடிய சக்தியும் மக்களின் அரசாங்கத்திலேயே சேர வேண்டியது அவசியம். இது மற்றொரு விடை "சோஷலிஸம் ஏன் வர வேண்டும்" என்ற கேள்விக்கு.

** ** **

வீட்டிலே தோட்ட வேலை செய்கிறோம். நானும், என் இரு குழந்தைகளும் காய்கறிச் செடிகள், பூச்செடிகள் இவற்றை அமைக்கிறோம். என் குழந்தைகள் எனக்கு உதவிக் கருவிகள். நான் அவர்களை இரண்டு முறைகளில் வேலை வாங்கலாம். தந்தை என்ற முறையிலே அதிகாரத்தை உபயோகித்து "அடேய், தண்ணீர் கொண்டு வா" "ஏய், களைக் கொத்தியைக் கொண்டு வா" என்று ஏவலாம். வேலை நடக்கும் ஒருமாதிரி. ஆனால் பாதி மனதுடன்தான். வெளியிலே சிநேகிதனும், சிநேகிதியும் காத்திருந்தால் கொஞ்சம் அயரும் போது ஓடிவிடுவர். நாம் பொறுத்து கொண்டிருக்க வேண்டியதுதான்.

மற்றொரு முறை இருக்கிறது. பூக்கள் பாத்தி எப்படிப் போடுவது! எங்கே அதை நடுவது என்று அவைகளின் அறிவுக்கும், ஆர்வத்துக்கும் மதிப்பும் இடமும் அளித்துக் கூட்டுறவாக வேலை செய்தால் வாயிலிலே சினிமா வண்டி போனாலும் கூட கவனிக்காது இரட்டிப்புத் திறனுடன் வேலை செய்து மகிழ்வர் குழந்தைகள். வேலை சீக்கிரமும் ஒழுங்காகவும் திறம்படவும் முடியும்.

மனிதன் ஒரு வளர்ந்த குழந்தை. அவனையும் இருவிதத்தில் வேலை வாங்கலாம். கசையடியில்லாவிட்டாலும், வயிற்றைக் கட்டுவதன் மூலம், இன்று வேலை வாங்குகிறார்கள். தொழிலாளர் கூட்டுறவு பல விதங்களில் தேடப்படுகிறது. தொழிலாளர் பங்கீடு, லாபப் பிரிவு என்று சில முறைகள் தொழிலாளியைத் தொழிலிலே அக்கறை கொள்ளும்படி தூண்டுகின்றன. இந்த முயற்சிகள் கற்கண்டு கேட்டவனுக்குக் கல் கொடுப்பது போன்றவை. அதிக பட்சம் அவை அவனைக் குட்டிச் சாத்தானினும் கொடிய குட்டி முதலாளி ஆக்குகின்றன. அவை ஒருபோதும் முற்போக்கு ஆகமாட்டா.

பொது உடைமையான தொழில்களிலே தரக் குறைவு தாண்டவமாடுவதாகவும், தொழிலாளர்கள் முழுத் திறமையைக் காட்டுவதில்லை என்றும் கூறப்படுகிறது. இவை சோஷலிஸத்துக்கு விரோதமான வாதங்களாகக் கூறப்படுகின்றன. மனிதன், மனிதன் செய்யக்கூடிய அளவு வேலை செய்வதே முழுத் திறமையின் அளவுகோல். அவன் மாடு மாதிரி வேலை வாங்கப்பட்டால், அது சமூகத்துக்கும், அவனுக்குமே நல்லதில்லை என்பது நினைவிலிருக்க வேண்டும். தவிரவும் தொழிலாளர்கள் உள்ளபடியே பொறுப்பற்று இருந்தாலும் அவர்களிடையே தக்க படிப்பினால் அவர்கள் மாற்றப் படக் கூடியவை என்பதும் கண்டறிந்த உண்மை.

தொழிலாளி உற்பத்தியிலே ஒரு பிரதான கருவி. இரண்டு கைகள் இன்றிச் சத்தம் வராது போல் முதலுடன் தொழில் சேராது போனால் உற்பத்தி இராது. இந்த இணைப்பு மனமொத்ததாகவும், திருப்திகரமானதாயும் இருக்க, தொழிலாளிக்குத் தன் உழைப்பின் பயன், தனிப்பட்டவரின் தகுதியற்ற கைகளில் போய், சமுதாய நலனில்லாத வழிகளில் செலவழியவில்லை என்ற திண்ணம் இருக்க வேண்டுவது அவசியம். அப்பொழுது உற்பத்தி பெருகும். நாடு செழிக்கும். மக்கள் மகிழ்வர். இதுவும் ஒரு பதில் "சோஷலிஸம் ஏன் வேண்டும்" என்ற கேள்விக்கு.

** ** **

"சோஷலிஸம் ஏன் வேண்டும்" என்ற கேள்விக்குப் பதிலாக இன்று நிலவும் ஒவ்வொரு சமுதாய அநீதியையும் எடுத்துக் காட்டலாம். மனிதன், பிற மனிதனை, இளைத்தவனாக எண்ணும் போக்கே மாறி "அதோ போகிறாரே அவர்தான், அந்த மூன்று லட்சம்" "அவர்தான் இந்த ஊர் டாடா" "இவன்தான் இன்சால்வெண்ட், மஞ்சள் காகிதம்" "போடா பிச்சைக்காரப் பயலே, காலணாவுக்கு வழியில்லை" "வெறும் நாடோடியாக இருந்தான் சார், இப்பொழுது பாருங்கள் 'ப்யூக்' காரில் புரள்கிறான்; கண்கூடத் தெரிவதில்லை" என்ற விதவிதக் கூக்குரல்கள் போட்டியை அடிப்படையாகக் கொண்டே இன்றைய சமுதாயத்தின் பொருளாதார சீர்குலைவைக் காட்டுகின்றன. இதைச் சீர் செய்ய, ஒரு ஒழுங்கு படுத்தச் சோஷலிஸ முறையினால்தான் முடியும்.



இது விஞ்ஞான யுகம். இயற்கைச் சக்திகளை வழிப்படுத்துவது, புரியாதனவும் வகுத்துக் கூற முடியாதனவுமான இயற்கைச் சக்திகளைக் கற்று அவைகளின் செயலை முன்கூட்டி



அறியக்கூடிய அளவுக்கு அறிவைப் பெருக்கி மனிதனுக்கு அவற்றினால் கேடு ஏற்படா வண்ணம் செய்வதான முயற்சியே விஞ்ஞானத்தின் அடிப்படை. இடியையும் மின்னலையும் கண்டு பயங்கொண்டு அவற்றைத் தூர்த் தேவதைகளாக வழிபட்ட காலத்திலிருந்து இன்று நாம் வந்திருக்கும் தூரம் மகத்தானது. இவ்வாறு இருக்கையில் மனிதன் உயிர் வாழ்வில் மட்டும் நாளைக்கு என்ன நடக்கப் போகிறது என்ற திண்ணமின்றியும், நாளை உணவு எங்கிருந்து வரப்போகிறது என்ற துயர்ச் சிந்தனையிலும் பெரும்பான்மை மக்கள் உழல்வது நாகரிகத்துக்கு ஒவ்வாத வெட்கக்கேடு. வாழ்ந்தால் அனைவரும் வாழ்வோம் என்ற திண்ணம் மூட்டி, மனிதனின் ஆக்க சக்தியைப் பூரணமாக வெளிக்கொணர்வதற்கு அவனுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு இருக்க வேண்டுவது அவசியம். இதைத் தரத் திட்டமிடுவதே சோஷலிஸம்.

** ** **

"சோஷலிஸம் ஏன் வேண்டும்" என்ற கேள்வியின் அடியில் இன்னும் ஒரே கேள்விக்கு மட்டும் விடையிறுத்து விடுவோம். அது "சோஷலிஸம் ஏன் இந்தியாவுக்கு வேண்டும்" என்பதே. இது சிலரின் கேள்வி. சோஷலிஸம் மனித இனத்துக்கென ஏற்பட்டதன்றி, இந்தியர், கிரேக்கர், அமெரிக்கர், ரஷ்யர்க்கோ பேசப்படும் தத்துவமல்ல. எனவே இந்தியருக்குத் தேவை. அதுவும் மக்களைப் பிளந்து கட்டிவிட மதம் முதல் மொழி ஈறாக பல சக்திகளும் ஈடுபட்டுள்ள இந்தச் சந்தர்ப்பத்தில் மனித இனத்தின் அடிப்படை ஒற்றுமையையும், லட்சிய ஒருமைப் பாட்டையும் எடுத்துக் காட்டி, அவற்றை ஒழிக்க உரன் கொண்ட உண்மைச் சக்தியான சோஷலிஸம் தேவைதான். தொடக்கத்திலேயே குறிப்பிட்டோம் சோஷலிஸம் ஓர் வித வாழ்க்கை நெறியுமாம் என்று. மனிதனுக்கு மனிதன் உள்ள வேறுபாடுகள் இயற்கையும் செயற்கையும் ஆக இரண்டாகப் பிரியும்; இயற்கைப் பிரிவுக்கு யாரும் எவ்விதப் பொறுப்பாளியுமில்லை என்பதும், செயற்கை வித்தியாசங்களை ஒழித்துவிட முடியும் என்பதும் சமத்துவ நிலையே மனித சமுதாயத்தின் இயற்கை நிலை என்பதை வலியுறுத்துகின்றன. உயர்வு தாழ்வு உள்ள எந்தச் சமுதாயத்திலும் ஆக்க வேகம் வெளிப்படாது என்ற அடிப்படை உண்மைகள் நம் நாட்டில் பரவி வேரூன்றி இன்று நிலவும் அரசியல் அராஜகத்தையும் பொருளாதாரப் பிரச்னைகளையும் தீர்க்க வேண்டுவது அவசியம்.

பழமை பேசித் திரிவதன் பெருமை, அப்பெருமையின் காரணத்தை அறிந்து கடைப் பிடிப்பதிலேயே இருக்கிறது. இந்திய நாடு பல்வேறு வகை சமூக, மத, அரசியல் சித்தாந்தங்களை எதிர்கொண்டு, சீரணித்து, உள்ளடக்கிக் கொண்டு விட்டது. சரித்திரப் போக்கிலிருந்து வெளியாகிறது. முற்போக்கு என்பது பெருவாரியானவருக்கு அதிகமான நன்மை பயப்பது என்றால் அது சோஷலிஸத்தினால்தான் முடியும் என்று வலியுறுத்திக் கூறலாம். தீவிர சோஷலிஸப் பிரசாரம் நாட்டில் பரவலாக நடந்து மக்கள் சோஷலிஸ தத்துவத்தையும், அதன் நன்மைகளையும் உணர்ந்து, உருப்படாத தலைமையை ஒழித்து, லட்சியவாதம் ததும்பும் புதிய தலைவர்களை வெளிப்படுத்தி, பாரத நாடு செழித்தோங்கும் நன்னாள் வந்து விடும் என்பது திண்ணம்.

சுதந்திரம் பெற்ற நம் பாரத நாடு எல்லா வளங்களும் பெற்று உயர வேண்டுமானால், உலகில் இதர நாடுகளுடன் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமானால், நம் நாட்டு மக்கள் உண்ண உணவும், உடுக்க உடையும் பெற்று கஷ்டமில்லாமல் சந்தோஷமாக வாழ வேண்டுமானால் "சோஷலிஸம்" ஒன்றுதான் அதற்கு மாற்று. வெல்க சோஷலிஸம்!



பம்பாய் "கலா நிலையம்" கோஷ்டியார் "நாடோடி" எழுதிய "பஜ கோவிந்தம்" என்னும் நாடகத்தை மிக்க வெற்றிகரமாக நடத்திப் புகழ் பெற்றார்கள். மேற்படி நாடகத்தைப் பார்த்து ரசித்த சபையின் ஒரு பகுதியை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

,நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.

ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

# புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்






திடுக்கிட்டு விழித்து எழுந்தான் சுந்தரம். அறை யெங்கும் ஒரே இருட்டு. தான் எங்கிருக்கிறோம் என்று புரிந்து கொள்ளச் சற்று நேரம் பிடித்தது. சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் எட்டு முறை அடித்து விட்டு ஓய்ந்தது.

ஆம்! அவன் சாய்வு நாற்காலியிலேயே கண்ணயர்ந்து விட்டிருக்கிறான். அவன் மார்பின் மீது அவன் தந்தையிடமிருந்து அன்று வந்த கடிதம் கிடந்தது. காகிதம்தான் என்றாலும் அது அவன் மார்பின் மீது ஒரு பாறாங்கல்லை வைத்தாற் போல் அழுத்திக் கொண்டிருந்தது. அன்று மாலை காரியாலயத்திலிருந்து வந்தவன் அந்தக் கடிதத்தைப் படித்தவாறே கண்ணயர்ந்து விட்டிருக்கிறான்.

தட்டுத் தடுமாறிக்கொண்டு விளக்கின் விசையை அமுக்கினான். விளக்குக்கு அந்த அறையின் இருளைத்தான் அகற்ற முடிந்ததே தவிர அவன் இதயத்திலுள்ள இருளை அகற்ற முடியவில்லையே!

கடிதத்தில் அவன் தந்தை பழைய பல்லவியைத் தான் பாடியிருந்தார். ஆனால் இந்தக் கடிதத்தின் மூலம், அவன் பெற்றோர்களின் தாபம் பொறுமையின் எல்லையை அடைந்து விட்டதைக் கண்டான்.

"அன்புள்ள சுந்தரத்துக்கு அநேக ஆசீர்வாதங்கள். உன் விவாக விஷயமாக நாங்கள் எழுதிய கடிதங்களுக்கு இதுவரை பதிலில்லை. நீ இவ்வளவு பிடிவாதமாக இருந்தால் எங்கள் கதி என்ன ஆவது! உன் தாயார், உன் மனம் மாறுவதற்காக, விரதம் என்று சொல்லிச் சாப்பிடாமல் உடம்பைக் கெடுத்துக் கொண்டு வருகிறாள். ஏக்கக் கயிறு அவளை நாளுக்கு நாள் அவள் வாழ்வின் முடிவை நோக்கி இழுத்துக்கொண்டேயிருக்கிறது.

"நீ மனம் வைத்தால் ஒரே வார்த்தையில் அதை அறுத்தெறியலாம். உனக்காக இல்லாவிட்டாலும் ஏங்கிக் கிடக்கும் எங்களுக்காவது நீ மறு மணம் செய்து கொள்ள வேண்டும். இங்கு ஒருவர் உனக்குப் பெண்ணைக் கொடுக்கிறேன் என்று சொல்கிறார். நீ ஒரு மாதம் லீவு எடுத்துக் கொண்டு இங்கு வந்து கல்யாணத்தை முடித்துக் கொண்டு போ. இனியாவது நடந்ததை மறந்து எங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்வாய் என்று நினைக்கிறேன். உன் அன்புள்ள,—அப்பா."

"எனக்கா மறு மணம்! வஸந்தியை இழந்த எனக்கா புனர் வாழ்வு! அவள் விட்டுச் சென்ற இடத்தை இன்னொருவளுக்கு அளிப்பதா! ஐயோ வஸந்தி! உன் அன்புதான் எனக்கு வைராக்கியத்தை அளிக்க வேண்டும்" என்று குமுறியது அவன் அன்பு உள்ளம்.

சுவரில் மாட்டியிருந்த புகைப் படத்தைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான். அவன் வாழ்க்கையில் அவள் குறுக்கிட்டது ஒரு ரயில் சந்திப்பைப் போல அல்லவா ஆகிவிட்டது! இறந்த காலத்தைப் பற்றிய இன்பநினைவு அவன் மனத்தை அங்கு இழுத்துக் கொண்டு சென்றது.

** ** **

ஆம் வஸந்தியை அவன் முதன் முதலில் சந்தித்தது ரயிலில்தான். படிப்பை முடித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பிக் கொண்டிருந்தான் சுந்தரம். எழும்பூர் ஸ்டேஷனில் அன்று கூட்டமே இல்லை. ஒரு வண்டியில் பெட்டி படுக்கையுடன் ஏறிக் கொண்டான். ரயில் கிளம்பியவுடன் தன் சக பிரயாணிகள் மேல் தன் கண்ணோட்டத்தை விட்டான். ஒரு பெரியவர், ஐம்பது வயதிருக்கலாம். அவர் மனைவி ஒரு பெண் மற்றும் ஒரு பையன் இவர்கள்தான் அந்தப் பெட்டியில் பிரயாணம் செய்தார்கள். அந்தப் பெண் மிகவும் வசீகரமாக இருந்தாள்.

அந்தப் பெண்ணைத் தவிர மற்ற மூவரும் தூங்கி விட்டார்கள். அந்தப் பெண் மட்டும் ஜன்னல் அருகில் உட்கார்ந்து கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். சற்று நேரத்துக்கு ஒரு தரம்

அவனைத் திரும்பிப் பார்ப்பாள். அவன் பார்வையில் சிக்கி விட்டால் உடனே முகத்தைத் திருப்பிக் கொள்வாள். இனி அவனைத் திரும்பிப் பார்க்கக் கூடாது என்று சங்கல்பம் செய்து கொள்வாள். ஆனால் அவனுடைய வசீகரமான தோற்றம் அவள் உறுதியைக் குலைத்து விடும்.

இந்த நாடகம் சுமார் ஒரு மணி நேரம் நடந்தது. பிறகு சுந்தரத்துக்குத் தூக்கம் வந்தது. படுக்கையைக் கீழே விரித்து அதில் படுத்துக் கொண்டான். மறுகணம் நித்ரா தேவியின் வசமாகி விட்டான்.

அவன் மறுபடி விழித்துப் பார்த்தபோது அந்தப் பெரியவர் அவனை எழுப்பிக் கொண்டிருந்தார்.

"ஸார்! கொஞ்சம் வழி விடுகிறீர்களா? நாங்கள் இந்த ஸ்டேஷனில் இறங்க வேண்டும்" என்றார்.

சுந்தரம் சோம்பல் முறித்துக் கொண்டே, "இது என்ன ஸ்டேஷன் ஸார்?" என்று சாவதானமாக அவரைக் கேட்டான்.

"மதுரை" என்ற பதிலைக் கேட்டவுடன் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து படுக்கையை அவசரமாகச் சுற்றிக் கொண்டு பெட்டியையும் எடுத்துக் கொண்டு இறங்கினான்.

"ஸார்! நான் திருச்சியில் இறங்கியிருக்க வேண்டும். இந்தப் பாழும் தூக்கம் என் குடியைக் கெடுத்துவிட்டது ஸார்" என்று அங்கலாய்த்தான்.

"அதனால் பரவாயில்லை. மாலை ஆறு மணிக்குத் திருச்சி செல்லும் வண்டி யிருக்கிறது. அதில் திரும்பி விடலாம். ஆமாம், திருச்சியில் யார் இருக்கிறார்கள்? அங்கு அநேகமாக எல்லோரையுமே எனக்குத் தெரியும்."

"ரிடயர்ட் ஸப் ஜட்ஜ் ராமசாமியின் மகன் ஸார் நான்" என்றான் சுந்தரம்.

"என்ன! ராமசாமியின் மகனா! அவன் என் பால்ய சிநேகிதன் ஆயிற்றே! நீங்கள் என்னுடன் வீட்டுக்கு வந்து விடுங்கள். சாயங்காலம் திரும்பி வந்தால் போச்சு."

அவர் அழைப்பை மறுக்க முடியாமல் அவரைப் பின் தொடர்ந்தான் சுந்தரம். அவன் அவர் வீட்டுக்கு வரச்சம்மதித்ததும் அந்தப் பெண்ணின் முகம் மலர்ந்ததாக அவனுக்குத் தோன்றியது.

கண்டதும் காதல் என்று நடக்கும் இந்தக் காலத்தில் சுந்தரமும் வஸந்தியும் காதல் கொள்ள நிறைய அவகாசம் இருந்தது. வேலையில்லாமலே அடிக்கடி சுந்தரம் உட்கார்ந்து கொண்டிருந்த இடத்தைக் கடந்து சென்று கொண்டிருந்தாள் வஸந்தி. சுந்தரத்துக்கும் அடிக்கடி தண்ணீர் தாகம் எடுத்துக் கொண்டிருந்தது.

அதிகம் வளர்த்துவானேன்! ஆறு மணி ரயிலில் சுந்தரத்துடன் வஸந்தியின் உள்ளமும், ஜாதகமும் சென்று கொண்டிருந்தன.

விரைவில் காதலர்கள் தம்பதிகளாயினர். அவள் வந்த வேளையோ என்னவோ, சுந்தரத்துக்குச் சென்னையில் ஒரு நல்ல வேலை கிடைத்தது. ஜாகை கிடைத்தவுடன் வஸந்தியை அழைத்துக் கொள்வதாக ஏற்பாடாயிற்று. மூன்று மாதம் கழித்து வீடும் கிடைத்தது. இந்த சந்தோஷ சமாசாரத்தைத் தெரிவித்து விரைவில் அவளை அழைத்துச் செல்வதாகக் கடிதம் எழுதினான். இந்த உலகத்திலேயே மிகவும் சந்தோஷமாக இருக்கும் மனிதன் தான் தான் என்று மிகவும் குதூகலமாக இருந்தான்.

ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு அவனுக்கு வந்த தந்தி அவனை ஆனந்தக் கடலிலிருந்து இழுக்கும் தூண்டிலாக இருந்தது.

"வஸந்திக்கு ஆபத்து. உடனே புறப்பட்டு வரவும்" என்று அவன் மாமனார் அவனுக்கு ஒரு அவசரத் தந்தி அடித்திருந்தார்.




வஸந்தியை அழைத்து வருவதற்காகத் தீர்மானித்த ரயில் வண்டியிலேயே மிகவும் வியாகுலத்துடன் சென்றான். என்ன பிரயோஜனம்! காலதேவன் டைபாய்டு ரூபத்தில் வஸந்தியின் உயிரைக் குடித்து விட்டான்.

மனமுடைந்து மதராஸ் திரும்பினான். அதிலிருந்து எதிலும் பற்றற்றவனாய்க் காலம் கடத்தி வந்தான். தன் மனத்துயரை மறக்க வேலையில் அதிக கவனம் செலுத்தியதன் பயனாய் அவன் உத்தியோகம் உயர்ந்து ஆபீசர் ஆனான். ஆபீஸில் எல்லோரும் "இருபத் தெட்டு வயதிலேயே ஆபீஸர் ஆகிவிட்டார். அவருக்கு என்ன குறை!" என்று சொல்லிக் கொண்டார்கள். "அவனுக் கல்லவா தெரியும், பணத்திலும் அந்தஸ்திலும் மட்டும் இழந்த மனச் சாந்தியைச் சிறிதும் பெற முடியாது என்று!

சுந்தரம் காலண்டரைப் பார்த்தான். வஸந்தி அவனை விட்டுப் பிரிந்து மூன்று ஆண்டுகளும் இரண்டு மாதங்களும் ஆகி விட்டன. அவள் போனதிலிருந்து தனிமைதான். பெற்றோர்களின் நிலை அவனை மிகவும் கலக்கி விட்டது. இரண்டு மாதம் லீவு எடுத்துக் கொண்டு தன் பெற்றோர்களுடன் நிம்மதியாக இருந்து விட்டு வரலாம் என்று தீர்மானித்தான். அவர்கள் மறு மணத்தைப் பற்றிக் கேட்டால் பிறகு பார்த்துக் கொள்ளலாம்

என்று சொல்லி விடலாம் என்று மனத்தைத் தைரியப் படுத்திக் கொண்டான்.

**  **  **

அன்று காமாட்சி அம்மாள் விடியற்காலை நான்கு மணிக்கே எழுந்து தன் செல்வக் குமாரனுக்குப் பிடித்த பட்சணங்களைத் தயாரிப்பதில் மூழ்கியிருந்தாள். சுந்தரத்துக்கு வேண்டிய பால் கோவாவைத் தயாரித்து வைத்துக் கொண்டாள்.

"என்ன காமு! பிள்ளை வரப் போகிறான் என்ற சந்தோஷத்தில் என்னைக் கூடக் கவனிக்க மாட்டாய் போலிருக்கிறதே" என்று கேட்டவாறு நின்ற கணவனின் குரலைக் கேட்டுத் திரும்பினாள்.

"என்னைச் சொல்லி விட்டீர்களே! நீங்கள் மாத்திரம் என்னவாம்!"

"என்ன செய்வது காமு! ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு என்று ஒரே பிள்ளையைப் பெற்றவர்கள் சமாசாரமே இவ்வளவுதான். மேலும் இரண்டு வருஷங்களாகப் பார்க்காத பிள்ளையைப் பார்க்கப் போகிறோம் என்ற இன்பக் கிளர்ச்சியில் என் இதயமே நின்று விடும் போலிருக்கிறது."

"எப்படியாவது நம் சுந்தரத்தின் மனம் மாறிக் கல்யாணத்துக்கு ஒப்புக் கொண்டானானால் போதும். வஸந்தி போனதிலிருந்து சரியாகக் கூட சாப்பிடாமல் இளைத்துக் கொண்டு வருகிறான்" என்றாள் காமு.

இவ்வாறு தங்கள் குமாரனைப் பற்றிய பேச்சில் மெய்மறந்திருந்த அந்தத் தம்பதிகளை வாசலில் வந்து நின்ற வாடகைக்காரின் சத்தம் இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது.

டாக்ஸியிலிருந்து இறங்கிய சுந்தரம் தனக்குப் பழக்கமான அந்தத் தெருவை அடக்க முடியாத ஆவலுடன் ஒருதரம் சுற்றிப் பார்த்தான்.

"இது என்ன! ஆச்சரியமாக இருக்கிறதே! எதிர் வீட்டு வாசலில் நிற்பது யார்! வஸந்தியா!" என்று பிரமிப்படைந்த சுந்தரம் கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான். அப் பெண் அசைப்பில் வஸந்தியைப் போலவே இருந்தாள். சிருஷ்டியின் விநோதத்தைப் பற்றி வியந்தபடியே மெய்மறந்து நின்று விட்டான். நடுத் தெருவில் ஒரு அறிமுகமில்லாத பெண்ணை இப்படி முறைத்துக் கொண்டு நிற்கிறோமே என்ற உணர்வு வந்தவுடன் மனம் வெட்கிச் சட்டென்று வீட்டுக்குள் நுழைந்தான்.

"என்டா கண்ணு! இளைத்துத் துரும்பாகப் போய் விட்டிருக்கிறாயே! உடம்பைப் பார்த்துக் கொள்ளக் கூடாதோ! உன்னை அங்கு அக்கறையுடன் கவனிக்க யார் இருக்கிறார்கள்! அதற்காகத்தான் நாங்கள் சொல்கிறபடி......" என்று முடிப்பதற்குள் அவள் கணவர் தொடர்ந்து, "சரி, சரி. குழந்தை களைப்புடன் வந்திருக்கிறான். முதலில் காப்பி டிபன் கொடு" என்று சாமர்த்தியமாகப் பேச்சை மாற்றினார். சுந்தரம் வந்ததும் வராததுமாகக் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தால் எங்கே பலன் அளிக்காமல் போய் விடுமோ என்று அவருக்குப் பயம்.

பெற்றோர்களின் அன்பு சுந்தரத்துக்குப் பரவசத்தை அளித்தது. ஆனால் அந்த அன்பினால் கூட அவன் மன ஏக்கத்தைப் போக்க முடியவில்லை.

சுந்தரம் அங்கு வந்து ஒரு வாரம் ஆயிற்று. இடமாற்றம் அவனுக்கு ஓரளவு மன நிம்மதியை அளித்தது. அந்த எதிர் வீட்டுப் பெண் அடிக்கடி அவன் கண்களில் பட்டுக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு விடுவாள். அவளை அடிக்கடி பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. இதற்குக் காரணம் அவள் வஸந்தியைப் போல் இருப்பதுதான் என்று நினைத்தான். ஆதலால் சாப்பாடு உறக்கம் முதலிய நேரங்கள் தவிர நாள் முழுதும் வாசற் புறத்து அறையின் ஜன்னல் ஓரமாகச் சாய்வு நாற்காலியிலேயே காலத்தைக் கழித்தான். அந்தப் பெண்ணும் அவனைப் பார்ப்பதும் பிறகு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு உள்ளே போவதுமாக இருந்தாள். அவளைப் பற்றி அம்மாவிடம் கேட்க வேண்டும் என்ற ஆவல் அவனுக்கு அதிகரித்துக் கொண்டே வந்தது.

அன்று காலை சுந்தரம் தான் வழக்கமாக உட்காரும் அறைக்குச் சரியாக வீட்டின் மறு பக்கத்தில் உள்ள ஸ்டோர் ரூமுக்கு ஏதோ காரியமாகச் சென்றவன் பாதி மூடப்பட்ட ஜன்னல் வழியாக எதேச்சையாக எதிர் வீட்டைக் கவனித்தான். அந்தப் பெண் அவன் உட்காரும் அறையைப்பார்த்துப் பெருமூச்சு விட்டு விட்டுப் புடவைத் தலைப்பால் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அதற்கு மேல் அவளைப் பற்றி அறியும் ஆவலைக் கட்டுப்படுத்த அவனால் முடியவில்லை. பகல் போஜனத்துக்குப் பிறகு அன்னையிடம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான். காமாட்சி அம்மாளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. தன் பிள்ளைக்கு அந்தப் பெண்ணின் மேல் ஆசை ஏற்பட்டு விட்டது என்று கண்டு கொண்டாள்.

அவள் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் "அந்தப் பெண்ணைத் தானடாப்பா உனக்குக் கொடுக்கிறேன் என்று வந்தார்கள். பெண் எவ்வளவு அழகு! எவ்வளவு சூடிகை! அதுவும் நம் வஸந்தியைப் போல் இருப்பதால் நீ சம்மதிப்பாய் என்றுதான் இத்தனை நாள் காத்திருந்தேன். உன் விருப்பத்தைச் சொன்னால்......" என்றாள்.

"அம்மா என்மீது உயிரையே வைத்திருக்கும் உங்கள் இருவர் விருப்பத்துக்கு நான் இணங்காவிட்டால் அதைப்போல் பாதகம் வேறொன்றும் இல்லை" என்றான் உணர்ச்சியுடன்.

"இங்கே ஓடி வாருங்களேன்! உங்கள் பிள்ளை கல்யாணத்துக்குச் சம்மதித்து விட்டான். நான் தானே அவனைச் சம்மதிக்கும்படி செய்தேன். எங்கே எனக்குப் பரிசு!" என்று பலமாகக் கத்தினாள் காமாட்சி அம்மாள்.

"அவ்வளவு லேசில் கிடைக்கக் கூடியதா அந்தப் பரிசு. இதோ எதிர் வீட்டுக்குச் சென்று நான் பார்த்துக் கொண்டு வருகிறேன்" என்ற ராமசாமியின் வாயெல்லாம் பல்லாகி விட்டது.

"ஆமாம், இதற்காக எனக்கு என்னதான் பரிசளிக்கப் போகிறீர்கள்!"

"ஒரு மருமகள்" என்று சிரித்தார்.

காரியங்கள் மிகவும் துரிதமாக நடந்தன. கல்யாணத்துக்கு நாளும் குறித்தாகிவிட்டது. அன்று பிற்பகல் மூன்று மணி இருக்கும். அவன் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த வண்ணம் தான் செய்த முடிவைப் பற்றி ஆராய்ந்து கொண்டிருந்தான். அப்பொழுது எதிர்வீட்டுப் பையன் அவனிடம் வந்து, "மாமா என் அக்கா இதை உங்களிடம் கொடுக்கச் சொன்னாள்" என்று ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுச் சென்றான். ஆவலுடன் அதைப் பிரித்துப் படித்தான்:—

"இன்று மாலை ஆறு மணிக்குப் பூங்காவில் என்னைச் சந்திக்கவும். மிகவும் முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும் — கல்யாணி."

"எதற்காக அவள் என்னைச் சந்திக்க வேண்டும்! ஒரு வேளை அவளுக்கு என்னைப் பிடிக்கவில்லையா!" என்று சிந்தித்தவண்ணம் அக்கடிதத்தை மடித்துப் பத்திரமாகப் பையில் வைத்துக் கொண்டான்.

மாலை ஆறு மணி சுமாருக்குப் பூங்காவுக்குள் நுழைந்த சுந்தரம் ஏற்கெனவே அவனுக்காகக் கல்யாணி காத்திருப்பதைக் கண்டான். இருவரும் ஒரு தனி இடத்தில் அமர்ந்தனர். சிறிது நேரம் அங்கு மௌனம் நிலவியது. அந்த மௌனத்தைக் கலைக்கச் சுந்தரம் முதலில் பேசினான்.

"முக்கியமான விஷயம், பார்க்க வேண்டும் என்று எழுதியிருந்தாயே, அது என்ன விஷயம்!"

"நான் தங்களை மணக்க முடியாத நிலையில் இருக்கிறேன்."

"அப்படியா! எனக்கு விஷயம் தெரியாது. நீ வேறொருவனைக் காதலிக்கிறாய் என்று முன்பே எனக்குத் தெரிந்திருந்தால் இந்தக் கல்யாணத்துக்கு இணங்கி யிருக்க மாட்டேன்."

"நான் வேறு ஒருவரையும் காதலிக்கவில்லை."

"அப்படியானால் ஒரு வேளை இளையாளாக வாழ்க்கைப்பட விருப்பமில்லையா!"

"நான் இளையாளாகத்தான் வாழ்க்கைப்பட விரும்புகிறேன்."

"பின் நமது விவாகத்துக்குத் தடையாக இருப்பது எது!"

"கடமை."

"கடமையா! அப்படியானால் உன் பெற்றோர்களுக்கு உன்னை எனக்கு மணம் செய்துகொடுக்க விருப்பமில்லையா!"

"பெற்றோர்களின் நிர்ப்பந்தத்தின் பேரில்தான் நான் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதித்தேன்."

"பின் யாருக்காக இந்தக் கடமை! புதிர் போடாமல் விஷயத்தை விவரமாகச் சொல்."

"என் உயிருக்குயிரா யிருந்த என் காலஞ்சென்ற தோழிக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டுமானால் நான் தங்களை மணப்பது முடியாத காரியம்.

"சாதாரணத் தோழியா அவள். உடலும் உயிரும்போல், நகமும் சதையும்போல், கரும்பும் எறும்பும்போல் என்னோடு இருந்தாள். மூன்று வயதில் ஆரம்பித்த எங்கள் நட்பு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. அவள் கல்யாணம் எங்கள் உடல்களைத் தான் பிரித்ததே தவிர உள்ளங்களைப் பிரிக்க வில்லை. அவள் எனக்காக எவ்வளவு கஷ்டங்களைச் சந்தோஷத்தோடு அநுபவித்திருப்பாள்! நாங்கள் சிறுமிகளாக இருந்தபோது நடந்த சம்பவம், இன்னும் என் மனத்தில் பசுமையாக இருக்கிறது.

"அன்று பள்ளிக்கூடத்தில் கணக்கு வகுப்பு நடந்து கொண்டிருந்தது. மிகவும் பொல்லாதவரான கணக்கு வாத்தியார் கரும் பலகையில் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு வண்ணாத்திப் பூச்சி உள்ளே பறந்து வந்து அவர் தலைப்பாகையின்மீது உட்கார்ந்து கொண்டது. அந்தக் காட்சி மிகவும் வேடிக்கையாக இருந்தது. எல்லோரும் கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டிருந்தனர். என்னால் மட்டும் சிரிப்பை அடக்க முடியவில்லை. உரக்கச் சிரித்து விட்டேன்.

"வாத்தியார் திரும்பினார். அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க 'இப்பொழுது யார் சிரித்தது!' என்று கர்ஜனை செய்தார்.

"என் உடல் நடுக்கம் கண்டது. குற்றத்தை ஒப்புக் கொள்ளத் தைரியமில்லை. கைகால்கள் நடுங்கின. பெருமுயற்சி செய்து எழுந்திருக்க யத்தனித்த போது, கையினால் என் தோளைப் பிடித்து அமுக்கிக் கொண்டே என் சிநேகிதி தைரியமாக எழுந்து நின்றாள்.

"'ஐயையோ! எனக்காக அவளா அடிபட வேண்டும்! கூடவே கூடாது. நானே குற்றத்தை ஒப்புக் கொண்டு விடுகிறேன்' என்று தீர்மானித்த போது நெருங்கி வரும் உபாத்தியாயரின் கடுமையான முகத்தைக் கண்டு செயலற்று விட்டேன்.

"அன்று அவளை உபாத்தியாயர் நன்றாக அடித்து விட்டார். அவ்வளவு அடியையும் பொறுமையாக எனக்காக வாங்கிக் கொண்டாள்.

"இந்த மாதிரி எவ்வளவோ சம்பவங்கள். இண்டர் மீடியட் வரை ஒன்றாகப் படித்தோம். பிறகு என் தந்தை ரிடையர் ஆகிவிட்டபடியால் எங்கள் சொந்த ஊராகிய இங்கு வந்து விட்டோம். இப்பொழுது சொல்லுங்கள், இவ்வளவு தன்னலமற்ற சிநேகிதியின் கடைசி விருப்பத்தை நிறைவேற்றாமலிருக்க முடியுமா!"

"முடியாதுதான். ஆனால் அதற்கும் நம் விவாகத்துக்கும் என்ன சம்பந்தம்!"

"அவசரப்படாதீர்கள்! என் அருமைத் தோழி இரண்டு வருஷங்களுக்குப் பின் என்னைவிட்டு, ஏன் இந்த உலகத்தை விட்டே பிரிந்து விட்டாள். அவள் கடைசியாக எனக்கு எழுதிய கடிதத்தில் அவள் கணவர் அழகிலும் குணத்திலும் சிறந்தவர் என்றும், அவரையே நான் மணந்து கொண்டால் தான் அவள் ஆத்மா சாந்தியடையும் என்றும் வேண்டிக் கொண்டிருந்தாள். அவள் கொடுத்த விலாசத்துக்கு நான் எழுதிய கடிதங்கள் யாவும் எனக்கே திரும்பி வந்து விட்டன. என்ன செய்வ தென்றே புரியவில்லை. அவர் அகப்பட்டால் அவரையே மணந்து கொள்வது இல்லையேல் கன்னியாகவே வாழ்வது என்று தீர்மானித்து விட்டேன்" என்றாள் கண்களில் நீர் ததும்ப.

"கல்யாணி, உங்கள் கதை என் மனத்தை மிகவும் உருக்கி விட்டது. மரணப் படுக்கையில் இருக்கும் போது கூட தன் கணவனின் நலனையும், தோழியின் நலனையும் கருதும் உன் சிநேகிதியின் தியாகம் பெரிதா, சிநேகிதியின் வாக்கைக் காப்பாற்ற ஒரு முன் பின் தெரியாத மனிதனை, அதிலும் ஒரு முறை விவாகமானவனை மணக்க முன் வந்திருக்கும் உன் தியாகம் பெரிதா என்று என்னால் நிர்ணயிக்க முடியவில்லை. உன் விருப்பப் படியே என் பெற்றோர்களிடம் சொல்லி இந்த விவாகத்தை நிறுத்தி விடுகிறேன். என்னால் உனக்கு ஏதாவது உதவி தேவையாக இருந்தால் தயங்காமல் சொல். உடனே செய்கிறேன்."

"என் சிநேகிதி வஸந்தியின் பெற்றோர்களின் மதுரை விலாசம் கொடுக்கிறேன். முடியுமானால்......" என்று அவள் கூறி முடிப்பதற்குள்,

"வஸந்தியா உன் தோழி!" என்று குறுக் கிட்டான் மிகவும் உற்சாகத்துடன்.

"ஏன் உங்களுக்கு அவளைத் தெரியுமா!" என்று ஆவலும் ஆச்சரியமும் பொங்கக் கேட்டாள். சுந்தரத்தின் முகத்தில் தோன்றிய புன்முறுவலைக் கண்டு ஒன்றும் புரியாமல் விழித்த அவள் கையில் தன் மணிபர்சைக் கொடுத்து, "இந்த மணிபர்சைத் திறந்து பார்" என்றான்.

அதைத் திறந்து பார்த்த கல்யாணியின் முகம் சட்டென மலர்ந்தது. அதில் வஸந்தியும் சுந்தரமும் ஒரு சிறு புகைப்படத்திலிருந்து அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டிருந்தனர். "நான் அவ்வளவு பாக்கியசாலியா!" என்று கூவி விட்டாள் அவளையுமறியாமல்.

"இப்பொழுது உன் கடமையை நிறைவேற்ற யாதொரு ஆட்சேபணையும் இல்லையே!" என்று சுந்தரம் கேலியாகக் கேட்டான்.

"கரும்பு தின்னக் கூலி வேண்டுமா!" என்று கூறும் போது வெட்கம் கவ்விக் கொள்ளத் தலையைக் குனிந்து கொண்டாள் கல்யாணி.

விசைச்
சக்தியின்
வேகம்



நீங்களும்
பெறுக



# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிரமமான வேலை நீங்கிலும், சளைக்காத உணர்ச்சியிருக்கும் போதுதான் நீங்கள் திடமான ஆரோக்யம் உள்ளவரென்பதைக் குறிக்கும். சளைக்காத உணர்ச்சி பெறுவதற்கு, பிரதி தினமும் போஜனத்தின் அங்கமாக வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதைத்தவிர சிறந்த தொன்றுமில்லை. தேக வளுவூட்டுவதற்கு அத்யாவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், வேலை செய்வதற்கான திராணியை பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் இதர நிலைமைகளுக்கு இடம் கொடாதபடி தேகத்திற்கு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

உங்கள் குடும்பம் முழுவதற்கும் இப்பொழுதே வாங்கி விடுங்கள்




# WATERBURY'S
## COMPOUND
## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களை தெம்புடன் வைத்திருக்கும்

NAS-41-63

# போர் சிருஷ்டித்த புதுமை

ஜெயமணி

எஸ்டோனியா தேச மக்களுக்குச் சுதந்திரம் எவ்வளவு பெரிய பிரச்னையோ, அது போல் எஸ்டோனிய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையும் பெரிய விஷயமாக இருந்து வந்தது. அந்த நாட்டின் சுதந்திரம் நிலைப்பதும் நிலைக்காததும் அது அனுஷ்டிக்கும் வெளிநாட்டுக் கொள்கையையே பெரிதும் பொறுத்திருந்தது.

எஸ்டோனியாவை ஒரு புறத்திலிருந்து ருஷ்யா பயமுறுத்திக் கொண்டிருந்தது; மற்றொரு புறத்திலிருந்து ஜெர்மனி மிரட்டிக் கொண்டிருந்தது. இருதலைக் கொள்ளி எறும்பு போல் தவித்து வந்த எஸ்டோனியா மேற்படி இரு வல்லரசுகளுக்கும் நல்ல பிள்ளையாக நடக்க வேண்டியதாகி விட்டது.

1940-ம் வருஷத்தில் எஸ்டோனியா ருஷ்யாவுக்கு உட்பட்ட குடியரசாகி விட்டதால், அதைக் காரணமாக வைத்துக் கொண்டு 1941-ல் ஜெர்மன் துருப்புகள் எஸ்டோனியா மீது படையெடுத்து அந்த நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டன. எனினும் 1944-ம் வருஷத்தில் ஜெர்மன் துருப்புகளை அங்கிருந்து ருஷ்யத் துருப்புகள் விரட்டி விட்டன.

இப்போது அந்த நாடு போல்ஷிவிக் ருஷ்யாவைச் சேர்ந்த ஒரு பாகமாகவே கருதப்பட்டு வருகிறது.

* * *

பதினெட்டாயிரத்து நானூறு சதுர மைல் விஸ்தீரணம் உள்ள எஸ்டோனியாவின் ஜனத் தொகை சுமார் பன்னிரண்டு லட்சம் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

எஸ்டோனிய மக்கள் பரம்பரையாக மிகவும் உழைப்பாளிகள். அந்த நாட்டில் விவசாயமும் மாட்டுப் பண்ணையும் தான் ஜனங்களின் முக்கியமான ஜீவனத் தொழில்களாக இருந்து வருகின்றன.

எஸ்டோனியாவில் உற்பத்தியாகும் பொருள்களில் சணல்தான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. கம்பு, பார்லி, கோதுமை, உருளைக் கிழங்கு முதலியன அந்த நாட்டில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களில் முக்கியமானவை.

சென்ற முப்பது வருஷங்களுக்கு மேலாக எஸ்டோனியாவில் உள்ள நிலங்களில் பெரும்பாலானவை, அவற்றில் வேலை செய்யும் குடியானவர்களுக்கே சொந்தமாக இருந்து வருகின்றன. 1919-ம் ஆண்டிலே சர்க்கார் அந் நாட்டில் இருந்த பெரிய நிலச்சுவான்தார்களிடமிருந்து நிலங்களைத் தாங்கள் எடுத்துக் கொண்டு, நிலமற்ற ஏழை விவசாயிகளுக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டார்கள்.

மேற்படி நாட்டில் ஆடு மாடுகள் மேய்வதற்கான புல் வயல்கள் ஏராளமாக இருக்கின்றன. அந்த நாட்டில் உற்பத்தியாகும் வெண்ணெய், பாலடை முதலியவை அங்குள்ள மக்களுக்குக் கண்டு, வெளி நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஆட்டு மாட்டுத் தோல்களும் அங்கு உற்பத்தியாகும் சாதனங்களில் முக்கியமானவை.

எஸ்டோனியாவில் காகிதம், சிமெண்டு, தீக்குச்சி, கம்பளி, பருத்தித் துணிகள் முதலியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் இருக்கின்றன.

எஸ்டோனியா காடுகளிலிருந்து மரங்களும் ஏராளமாகக் கிடைக்கின்றன.

எஸ்டோனியாவில் பூமிக்குக் கீழே அபரிமிதமாக எண்ணெய் இருக்கிறது. ஆனால் அது இன்னும் அபிவிருத்தி செய்யப்படவில்லை.

* * *

எஸ்டோனியா சிறிய தேசமாயினும், அங்குள்ள ஜனங்கள் யாவரும் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருப்பது அந்த நாட்டின் விசேஷ அம்சம் ஆகும். அங்கு குழந்தைகள் எட்டு வயதிலிருந்து பதினாறு வயது வரையில் கல்விச் சாலைக்குப் போய்த் தீரவேண்டும் என்ற சட்டம் அமுலில் இருந்து வருகிறது. எஸ்டோனியாவில் உள்ள கல்விச் சாலைகளில் தோட்ட வேலை, விவசாயம் இவைகளுடன் பல்வேறு கைத் தொழில்களும் கற்றுக் கொடுக்கப் படுகின்றன.

ஐரோப்பாவிலே எஸ்டோனியாவுக்கு வெளியில் எஸ்டோனியா பாஷை பேசப்படுவதில்லை. எனவே, எஸ்டோனியர்கள் தங்களுடைய தாய் பாஷையைத் தவிர குறிப்பிட்ட ஏதாவதொரு அன்னிய பாஷையைக் கல்விச் சாலைகளில் கட்டாய பாடமாகக் கற்க வேண்டியிருக்கிறது.

எஸ்டோனியாவில் உள்ள சர்வ கலா சாலை 1632-ல் ஆரம்பிக்கப் பட்டதாகும்!

முன்பு ரிவால் என வழங்கப்பட்டு வந்த நகரே, இப்போது டாலின் என்ற பெயருடன் எஸ்டோனியா தலை நகராக இருந்து வருகிறது. அது பின்லந்து வளைகுடாவில் சிறந்த இயற்கைத் துறைமுகமாக அமைந்திருக்கிறது. ஒன்றரை லட்சம் ஜனத் தொகை உள்ள டாலின்தான் எஸ்டோனியாவிலேயே பெரிய நகரம். அங்கு ஏராளமான நெசவு ஆலைகள் இருக்கின்றன. எஸ்டோனியா தேசத்துக்குத் தேவையான கப்பல்கள் அங்குதான் நிர்மாணிக்கப் படுகின்றன.

* * *

இது வரையில் இரும்புத் திரைக்கு உட்பட்ட அல்பேனியா, பல்கேரியா, ருமேனியா, ஹங்கேரி, செக்கோஸ்லோவேகியா, போலந்து, லிதுவானியா, லட்வியா, எஸ்




டோனியா முதலிய ஒன்பது நாடுகளைச் சுற்றியாகி விட்டது.

இப்போது பத்தாவதாக, கிழக்கு ஜெர்மனிக்கு வருவோம். இரும்புத் திரைக் கட்டுரைத் தொடரில் இதுதான் கடைசியாகும்.

ஜெர்மனியின் பண்டைய சரித்திரமும், ஜெர்மன் மக்களின் வீர தீர பராக்கிரமங்களும் அற்புதமானவை. ஆனால் அதன் சீரும் சிறப்பும் இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது சீரழிந்து விட்டன. வெறி பிடித்த சர்வாதிகாரியைத் தலைவராகக் கொண்ட ஒரு நாடு எவ்வளவு அதல பாதாளத்தில் விழுந்து விடும் என்பதற்கு இன்று ஜெர்மனி தேசமே உதாரணமாகத் திகழ்ந்து வருகிறது.

சென்ற மகா யுத்தத்தில் ஜெர்மனி படு தோல்வி யடைந்ததால், யுத்தத்தின் இறுதியில் வெற்றி பெற்ற வல்லரசுகள் அந்தத் தேசத்தை நாலு பிரிவுகளகப் பிரித்தன. ஒவ்வொரு பிரிவையும் முறையே ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இந்த நாலு வல்லரசுகளும் தங்கள் இஷ்டப்படி ஆக்கிரமித்துக் கொண்டன.

அதன்படி பர்லின் தலைநகர் உள்ளிட்ட கிழக்கு ஜெர்மனி ருஷ்யாவின் ஆதிக்கத்துக்கு, அதாவது இரும்புத் திரைக்கு உட்பட்ட நாடாகியது.

ஹிட்லர் வெற்றி கொண்ட பிரதேசங்கள் யாவையும் ஜெர்மனி இறுதியில் இழக்க நேர்ந்தது.

ஜெர்மனியின் ஆட்சியில் இருந்த ஆஸ்திரியா சுதந்திரம் அடைந்தது. கிழக்கு பிரஷ்யா உள்படப் பல இடங்களைப் போலந்தும் ருஷ்யாவும் பங்கு போட்டுக் கொண்டன. ஜெர்மனியின் இராணுவ பலம் அடியோடு மறைந்து, ஜெர்மன் மக்கள் சுதந்திரம் இழந்தனர். ஜெர்மன் தலைவர்கள் யுத்தக் குற்றவாளிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனை அடைந்து மாண்டார்கள்.

யுத்தம் முடிந்து ஏழு வருஷங்களாகியும் இன்னும் கிழக்கு ஜெர்மனி இரும்புத் திரையிலிருந்து வெளி வர வில்லை. ஜெர்மனியின் மற்றப் பிரதேசங்கள் இன்னும் அன்னிய நாடுகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறவில்லை.

* * *

தோல்வியுற்ற ஜெர்மனி உலகத்தில் இல்லாத ஒரு புதியப் பிரச்னையையும் சமாளிக்க வேண்டிய பரிதாபகரமான நிலைமை உண்டாகி யிருக்கிறது. சென்ற மகா யுத்தத்தில் லட்சக் கணக்கான ஜெர்மன் இளைஞர்கள் பலியாகி விட்டனர். அதனால் அந்த நாட்டில் ஆடவர்களைக் காட்டிலும் பெண்களின் தொகை எழுபது லட்சம் அதிகமாகி யிருக்கிறது. தேசத்தின் அபிவிருத்திக்கு இன்றியமையாத இருபதிலிருந்து நாற்பது வரையில் உள்ள இடசாரிகளின் தொகை வெகுவாகக் குறைந்து விட்டது.

எனவே லட்சக்கணக்கான யுவதிகள் கல்யாணம் செய்து கொள்ள முடியாமல் கஷ்டப்பட்டு வருகிறார்கள். அதன் விளைவாக, அந்த நாட்டில் ஜனன விகிதம் விழுந்து விட்டது. ஆடவர்கள் செய்ய வேண்டிய கடினமான வேலையை மாதர்கள் செய்யும்படியான நிர்ப்பந்தமும் ஏற்பட்டிருக்கிறது.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras-10

# உங்கள் வங்காளி ஜடைச்சிங்காரத்தின்

## அழகை பூர்த்திசெய்ய

### நீடித்து நிற்கும் பரிமளத்தோடுகூடின

# கலிபோர்னியன் பாப்பி

ரெஜிஸ்டேர்ட் டிரேட் மார்க்

## கூந்தல் தைலம் உபயோகியுங்கள்

★ **தினம்!**

இந்த ஜடைச்சிங்காரத்தைப் பற்றிய தகவல்களைத்தரும் துண்டுப்பிரசுரம் நெ. 5க்கு விளம்பர இலாகா, தபால்பெட்டி நெ. 822, பம்பாய் 1க்கு எழுதுங்கள். எந்த பாஷையில் வேண்டுமென்பதை குறிப்பிடவும். மற்ற ஜடைச் சிங்காரங்களை விவரிக்கும் துண்டுப்பிரசுரங்களுக்கு வரவிருக்கும் விளம்பரங்களை கவனிக்கவும்.

இன்னுமொரு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்பு



REGD. No. M 4392
*Registered as a newspapers in Ceylon*